சோதிட [illegible] ஆசிரியர், வேலூர்-வேலப்பாடி
வ. கு. வேலு நாயகர் அவர்கள் இயற்றிய

# ஜாதக சாகரம்

## மூலமும், விருத்தியுரையும்.

இந்நூலானது ஜோதிஷாபிமானிகளுக்கு ஒரு கற்பகத்தரு போன்றதாகும். ஏனெனில் இதன் ஆசிரியர், பலவித (கணிதாதி) ஜோதிஷ கிரந்தகர்த்தர்களின், ஜோதிஷ கிரந்தங்களை பரிசிலித்து உள்ளங்கை நெல்லிக்கனி யென வெகு எளிய நடையிலும் வெகு உண்மையை உண்மையாகவே ஏற்ற பொருத்தமான, சுலோக, வசன, விருத்த பூர்வங்களாக் சேர்த்து அமைத்து வெளியிட்டிருப்பது நம் தமிழ் உலகினரின் பாக்கியமேயாம். இந்நூலால் ஜாதகங்களில் ஏற்படக்கூடிய ஜன்ம லக்கினப் பிழைகளைத் திருத்தி, லக்னத்தை சுத்தம் செய்துகொள்ளும்படியும், கற்போத்பத்தி லக்ன சோதனையும், விஷ—வத்வயங்களையும் மற்றும் பாவஸ்புடத்தை வெகு எளிதாக (திருக்கணித) பஞ்சாங்கத்தினால் கிரக சாரங்களைக் கொண்டே கிரகங்களின் ஸ்புடத்தையும், லக்ன, பாவாதி ஸ்புடங்களையும், அங்கங்கு பதங்களுடன் சுலபமாக அறியும்படி விளக்கியிருக்கின்றார். அன்றி உலகில் ஜோதிஷ ஸூக்ஷமத்தை அறிவிக்கக்கூடிய நூல்கள் தாஜிகங்களே. அப்படிப்பட்ட தாஜிகங்களை ஆசிரியர் யவனதாஜிகம் யாதவ தாஜிகம், மாதவ தாஜிகம், நீலகண்ட தாஜிகம் முதலிய பல தாஜிகங்களையே கொண்டும். தாஜிகத்தின் உண்மையை எள்ளளவும் மறைவின்றி வெகு வெகு சுலுவாக அறிந்து கொள்ளும்படி விளக்கி யிருப்பது போற்றத் தகுந்ததாகும். இதற்கு இரண்டாம் பாகமும் அச்சியற்றப்படுகின்றது. இதில் மற்றொரு விசேஷ அம்சம் என்னவெனில் பிரதி வருஷம் வயது பூர்த்தியாகும் வருஷ பிரவேச, மாத பிரவேச, வார பிரவேசாதிகள் பூர்த்தியாகும் கால, லக்னம், மாதம், வாரம், இவையும் தசையின் ஆரம்பகால வயதும் தசாம்ச ராசி விபரமும், அவற்றின் பலனும் சொல்லப்பட்டிருப்பதால் தான் இதுவரை வெளிவந்துள்ள ஜோதிஷ புத்தகங்களை எல்லாவற்றையும் விட இது சிறந்த ஜோதிஷ கற்பகத்தரு, என்பதற்குப் பொருத்தமாகும். இந்த ஜாதக சாகரத்தின் இரண்டாம் பாகத்தைப் பூர்த்திசெய்து இதில் புதிதாக ஆரம்ப முதல் கோசார பலனும் தசைபுத்தி அந்தர சூக்ஷம பலனை தசை வரை பலனும் எழுதி யிருப்பது போற்றத் தக்கதே. இந்த இரண்டாம் பாகத்தை எழுதிப் பூர்த்திபெறச் செய்பவர் நமது ஜோதிஷ பாவத்திரய நிர்ணயத்தின் ஆசிரியரான ஸ்ரீமான் லக்ஷ்மீ நரஸிம்மாசாரியாரவர் இப்படிப்பட்ட புத்தகத்தை வைத்துக்கொண்டு தம்பலனை அறிந்து பலனையடையாதவர்கள் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்யில்லை என்பவர்களுக் கொப்பானவர்களே யாவர். இப் புத்தகத்தில் கூறியுள்ள ரகசி விளக்கத்தை எழுதி ஆகாது. இதை பெறுபவரே அறிவார்.

**ஜாதக சாகரம் முன் விலை ரு. 5—14—0. தற்போது விலை ரு. 3.**

**'ஆனந்தபோதினி' டேபில் ஆப் பாவாஸ் (அச்சில்)**

**ஜாதகசாகரம் 2-ம் பாகம் (அச்சில்) கூடிய சீக்கிரம் வெளிவரும்**

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

வெகுநாளாக பலரும் எதிர் பார்த்திருந்த
ஸப்தம, அஷ்டம, தசமபாவங்களை நிர்ணயிக்கும்

# ஜோதிஷ பாவத்திரய நிர்ணயம்

நீங்களே ஒவ்வொருவரும் ஜோதிஷருடைய உதவியின்றி வெகு சுலபமாக உங்களுக்கு இவ்விதமான மனைவியை இன்ன வயதில், இன்ன காலத்தில், இன்ன தெசையில், இன்ன திக்கில், இத்தனை தாரம், இன்ன காரணத்தால் அடைவீர்களென்றும், இதனால் செவ்வாய் தோஷமென்பதற்கு சமாதானமும்,

உங்களுடைய தொழிலை நீங்களே நிர்ணயித்து, அதனால் இவ்வளவு திரவியத்தை, இன்ன திக்கில், இன்ன காலத்தில், இந்த தெசையில், இன்னார் மூலமாக, இன்ன வழியால் அடையலாமென்றும்,

உங்களுடைய ஆயுள் இவ்வளவுதான் என்பதையும் நிர்ணயம் செய்து கொள்ளலாம். தங்களுடைய நக்ஷத்திரம் தெரியாதவர்களும் நாமநக்ஷத்திரத்தைக் கொண்டு பலனைத் தெரிந்துகொள்ளக்கூடும்.

இப்புத்தகமானது ஜோதிஷர்களுக்கும் ஷை மூன்று பாவ பலாபலன்களை தெளிவாகச் சொல்வதற்கு பெரிதும் சாதகமாகும்.

## இதன் விலை ரூபா 1—8—0

'ஆனந்தன்' சந்தாதாரர்களுக்கு விலை ரூபா 1—4—0

# பவளத்தீவு அல்லது குடும்ப சாபம்

ஸ்ரீமான் ஆரணி-குப்புசாமி முதலியார் அவர்கள் எழுதியது.

இக் கதையில் ஒரு செல்வச்சீமான் பேராசையால் செய்யும் குற்றத்திற்காக அவன் சந்ததியார் கொடிய சாபத்தை அனுபவிப்பது யாவர்க்கும் மேலான படிப்பினையைக் கற்பிக்கும். இதில் வரும் ஒவ்வொரு ஆசாமியின் சரித்திரமும் அவரவர் தத்தமது நடக்கைகளுக்குத் தக்க பலனை முடிவில் அடைவது ஒவ்வொரு சோர்த்தியான நீதியைப் போதிக்கும். இக் கதை ஆரம்பமுதல் முடிவு வரை வாசிப்போர் மனதைப் பூரணமாய்க் கவர்ந்து கொண்டு மிக்க களிப்பை யளிக்கும். **இதன் விலை 2-பாகம் ரூ. 3.**

# மின்சாரமாயவன்

(நான்காம் பதிப்பு)
விலை ரூ. 1—8—0

இது ஓர் மிக்க அபூர்வமான திருடன் சரித்திரம். இதன் கதாநாயகனாகிய மின்சாரமாயவன் என்னும் திருடன் கல்வியும் மிக்க புத்தி சாமர்த்தியமும் தீரமும் உடையவன். ஆதலால் அவன் செய்கைகள் ஒவ்வொன்றும் மிக்க பிரமிப்பை யுண்டாக்கத்தக்கதா யிருக்கும். அவன் ஆபத்தில் சிக்கிக் கொள்ளும் ஒவ்வொரு சமயமும் தப்புவான் என்று ஒருவரும் கருதார்கள். அப்படியிருந்தும் தப்பித்துக்கொள்வான். இது அறிவாளிகளுக்கு மிக்க விருப்பத்தை யுண்டாக்கத்தக்கது. மனிதர் உலக அனுபவம் பெற அறிந்து கொள்ள வேண்டிய பல விஷயங்களை பலர்க்கு அளிக்கக்கூடியது.

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

# ஞானகாந்தி

செ. இராஜு செட்டியார், எம்.பி. பி.ஐ., அவர்கள் இயற்றியவை.

கற்பின் ஜோதியாக விளங்கும் ஞானகாந்தி என்னும் இக்கதா நாயகியின் பதிபக்தி, அறிவு, ஆற்றல், பொறுமை, தன்னடக்கம், பிறர் துயரம் கண்டிரங்கல், பரோபகாரம் முதலியவை பல அத்தாட்சிகளோடு அனைவரும் படித்து ஆனந்திக்குமாறு வரையப்பட்டிருக்கின்றன. இதற்கு எல்லாவிதத்திலும் நேர்மாறான நடத்தையுள்ள அம்புஜம் என்னும் ஸ்திரீயின் போக்கு மிகவும் கேவலமாயிருந்தும், கடைசியில் நல்லுணர்வுபெற்று சீர்திருந்தி சாந்தமடைவது எல்லோருக்கும் சிறந்த நீதியைப் போதிக்கும்.

இதன் விலை ரூ. 1–6–0. ஆனந்தபோதினி சந்தாதாரருக்கு விலை ரூ. 1.

## தபால் கொள்ளைக்காரர்கள் அல்லது அந்தரக் களவு. (2-ம் பதிப்பு)

### (மிக்க அபூர்வமான துப்பறியும் நாவல்.)

இதில் கல்வியும் புத்தி சாமர்த்தியமுமுடைய ஒருவன் இரயில்வே தபால் இலாகாவில் இருந்துகொண்டு ஒருவரும் கண்டறியாதபடி கொள்ளையடிப்பது மிக்க வியப்பாக விருக்கும். துப்பறிபவன் அக்கொள்ளைக் கூட்டத்தாரிடம் சிக்கிக்கொண்டு தப்புவதும், கடைசியில் அவன் இக்கள்ளரைப் பிடிக்கக் காட்டும் சாமர்த்தியமும் பின்னும் வியப்பை யளிக்கும். இது நாணயமான கடிதத்தில் அச்சிடப்பட்டது.



இதன் விலை அணா 14.

## மதனபூஷணம் அல்லது இறந்தவள் பிழைத்தது

### ஒரு துப்பறியும் நாவல்.

ஸ்திரீகளுக்கு அளவுமீறிய சுயாதீன மளிப்பதால் உண்டாகும் தீமைகள் இதில் நன்றாய் விளக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் பல நீதிகளும் இதில் விளங்கும். குற்றவாளி எவ்வளவோ தந்திரமாயும், முன் யோசனையோடும் குற்றத்தைச் செய்திருக்க, துப்பறிபவர் அதைக் கண்டுபிடிப்பது வாசிப்பவர்களுக்கு அதிக ஆச்சரியத்தையும், பிரமையையும் உண்டாக்கும். நிரபராதியான ஒருவன், சந்தர்ப்ப சாக்ஷியங்களாலும் மெய்யான குற்றவாளி செய்த தந்திரத்தாலும் ஆபத்தில் சிக்கிக்கொண்டு மரண தண்டனையடையும்தறுவாயிலிருப்பது வாசிப்பவர்களுக்கு மிக சோகத்தை யுண்டாக்கும். விலை ரூபா 1.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

# அரசூர் இலக்ஷ்மணன்

## அல்லது அதியற்புதக் கள்ளன்.

இக்காவலில் அரசூர் இலக்ஷ்மணனது சாமர்த்தியச் செயல்களும், அதிசயத் திருட்டுகளும், சுரங்க என்ஜினீரும், நூதன நீர்மூழ்கிக் கப்பலைச் செய்யும் முறைகளைத் தெரிந்தவருமான லோகநாயகன் என்பவர் என்ன ஆனார் என்பதைப் போலீசாரும், துப்பறிபவர்களும் கண்டுபிடிக்க முடியாமலிருக்க இவ்வரசூர் இலக்ஷ்மணன் அவ்வுண்மையைக் கண்டுபிடிப்பதும், கொலைகாரர்களான எத்தூர் வீரண்ணனையும் அவனது சகோதரன் அழகப்பனையும் நடுங்கவைத்து உண்மையறிவதும், சிறையிலிருந்தவாறே ஒரு பிரபுவின் வீட்டில் கொள்ளையடிப்பதும், தான் செய்யும் களவுகளைக் கண்டுபிடிக்க முடியாவாறு துப்பறிபவர்களைத் திண்டாட வைப்பதும்,, இலக்ஷ்மணன் நல்லம்மாள்மீது காதல்கொண்டு மயங்குவதும், பிரசித்திபெற்ற துப்பறியுஞ் சிங்கம் ஆனந்தசிங்கின் அரிய முயற்சியும், கடைசியில் அரசூர் இலக்ஷ்மணனே கொள்ளையடிப்பதை விட்டுத் துப்பறியும் தொழிலில் ஈடுபட்டுப் பிரசித்திபெறுவதும் படிக்கப் படிக்க இன்பத்தைப் பயக்கும். சொற்பப் பிரதிகளே அச்சிடப்பட்டிருக்கின்றன. உடனே ஆர்டருக்கு முந்துங்கள், சுமார் 600பக்கங்கள் கொண்டது. இதன்விலை ரூபா 2.

# சந்திரசேகரி. (இரண்டாம் பதிப்பு)

எளிய இனிய நடையில் எழுதப்பட்டது. உலகானுபவமும் இலக்கண அறிவும் விசேஷமாகச் கொண்டது; அன்பின் மகிமை, பொறாமையின் பெருமை, கேடு நினைப்போர் கெடுவர், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் முதலிய பல அரிய விஷயங்கள் இதில் விளக்கமாகவும் படிப்போர் மனதைக் கவரக்கூடியதாகவும் எழுதப்பட்டிருக்கிறது. அறிவை விருத்தி செய்யக் கூடியதும் இதுவே. இதன் விலை ரூபா 1—4—0

# இதர ஆக்ட் புஸ்தகங்கள்

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| இந்தியன் பினல் கோட் சட்டம் | 3 | 0 | பரம்பரை கிராம உத்தியோகஸ்தர்கள் சட்டம் | 1 | 0 |
| கிரிமினல் லா | 3 | 0 | இந்துதேச சாக்ஷி ஆக்ட் | 1 | 0 |
| ஸிவில் லா | 3 | 0 | தேவஸ்தான சட்டம் | 1 | 0 |
| புது விவகார சிந்தாமணி | 2 | 8 | இன்கம் டாக்ஸ் சட்டம் | 1 | 0 |
| புது பெரிய ஹிந்து லா | 2 | 0 | ஸ்டாமபு ஆக்ட் | 0 | 12 |
| முகம்மதியன் லா | 2 | 0 | ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் | 0 | 10 |
| லோகல்போர்ட் ஆக்ட் | 2 | 0 | டிரஸ்டிகள் சட்டம் | 0 | 12 |
| கிராம முன்சிப் சட்டம் | 1 | 8 | கால நிர்ணயச் சட்டம் | 0 | 8 |
| பஞ்சாயத்துச் சட்டம் | 1 | 4 | நில ஆக்கிரமிப்பு என்குரோச்மென்ட் சட்டம் | 0 | 4 |
| எஸ்டேட் லாண்டு ஆக்ட் | 1 | 4 | கிராமச் சுகாதாரம் | 0 | 2 |
| கர்ணம் டெக்ஸ்ட் | 1 | 4 | | | |

ஆனந்தபோதினி ஆபீஸ்,

தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# தத்வசங்க்ரஹ ராமாயணம்

## இரண்டாம் பதிப்பு.

இது சமஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட அருமையான நூல். இதனை ஒரு முறை படிப்பவர்கள் இம்மை மறுமை யென்னும் இருவகை வாழ்விற்குரிய சாதனங்களை யுணர்ந்து மக்களாய்ப் பிறந்த தாம் அநுஷ்டிக்க வேண்டிய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு பகவானுடைய திருவருட்குரியவராக விளங்குவர் என்பதில் ஐயமில்லை. இந்த கிரந்தம் துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலன நிமித்தம் உலகத்தில் ஸத்யவந்தனாக விளங்கிய தசரத பூபதிக்கு ஸ்ரீ ராமனாக அவதரித்த ஜகத் பிரபுவின் குணநிசயங்களைப் பற்றிப் பேசுவது.



ஸ்ரீ ராமாவதாரத்தின் உண்மை இதனைப் படிப்பவர்க்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். இதனைப் படித்தால் அநேக ஞான நூற்களைப் படித்த பயனை ஒருங்கே யடையக் கூடும். ஸ்ரீராம பூஜா விதிகளும் அர்ச்சனைகளும் இதன் கண் விரிக்கப்பட்டுள்ளன. இதுவரையில் வெளியான ராமாயணங்களை விட மும்மடங்கு மேலான தத்வ உபதேசங்கள் இதன் கண் காணலாம்.

உபந்யாசகர்களுக்கு வேண்டிய பல அரிய விஷயங்களுடன் கூடியது. ஸ்ரீ ராம சரிதையை வாசிப்பதே இகபர நன்மை யளிக்கு மென்பர் பெரியோர் இதில் எண்ணிறந்த மிக்க அருமையான விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. **இதன் விலை ரூபா 4.**

# ஸ்ரீமத் கம்பராமாயண வசன சங்கிரகம்

## (சப்தகாண்டங்கள் அடங்கியது.)

**(நான்காம் பதிப்பு) இதன் விலை ரூபா 2.**

**ஸ்ரீ இராமர் பட்டாபிஷேகம் ஆப்டோன் படம் சேர்க்கப்பட்டது.**
**மிக்க திருத்தங்களோடு கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டுள்ளது.**

☞ சொற்ப காப்பிகளே அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆதலின் புஸ்தகம் வேண்டியவர்கள் முன்னரே எழுதிப் பெற்றுக் கொள்க.

ஸ்ரீ இராமபிரான் சரிதையை விரித்துக் கூறும் இந்த இராமாயணமானது மிக்க புண்ணிய கதை என்பது உலகறிந்த விஷயம். இதனைப் பாராயணஞ் செய்வதாலுண்டாகும் பயன்கள் அளவிடற்கரியனவாம். இதனைப் பக்தி சிரத்தையுடன் படிப்பவர்க்கு உலகத்தில் விரும்பக்கூடிய பொருள்களெல்லாம் கைகூடும்; உயர்ந்த அறிவுண்டாகும்; கீர்த்தி அதிகரிக்கும்; மோக்ஷத்தை அடையும் மார்க்கம் ஏற்படும்; இலக்ஷ்மி கடாக்ஷமுண்டாகும்.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

“எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.”—திருவள்ளுவர்.



| தொகுதி 27 | சித்திரபானு ஹு சித்திரைமீ கஉ.<br>1942ஹு ஏப்ரல்மீ 13உ. | பகுதி 10 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய்
 காவாய் உடையாய்! கொடுவினையேன்
உழைத்தால் உறுதியுண்டோதான்
 உமையாள் கணவா! எனையாள்வாய்;
பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ!
 பிறைசேர் சடையாய்! முறையோ என்று
அழைத்தால் அருளாது ஒழிவதே
 அம்மானே! உன் அடியேற்கு. (1)

ஒன்றும் போதா நாயேனை
 உய்யக்கொண்ட நின்கருணை
இன்றே இன்றிப் போய்த்தோ தான்
 ஏழை பங்கா! எங்கோவே!
குன்றேயனைய குற்றங்கள்
 குணமாம் என்றே நீ கொண்டால்
என்தான் கெட்டது இரங்கிடாய்
 எண்தோள் முக்கண் எம்மானே! (2)

வேண்டத் தக்கது அறிவோய் நீ
 வேண்டமுழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
 வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாது அருள்செய்தாய்
 யானும்அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசுஒன்று உண்டென்னில்
 அதுவும் உன்றன் விருப்பன்றே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) என்னை ஆளுடைய இறைவனே! மனம் குழைந்து உன்னை வந்தித்தால், எனது பழைய கொடிய கன்ம நோயை நீக்கி என்னைக் காப்பாயாக. கொடுவினையேனாகிய நான் தொண்டு செய்து வருவேனானால், முக்தி கிடைக்குமோ! உமாதேவி காந்தனே! அடியேனை ஆட்கொண்டு அருள்வாய். நான் அறியாமை காரணமாக, குற்றங்கள் செய்தால் தேவரீர் மன்னிக்க வேண்டாமா! மூன்றாம் பிறைச் சந்திரனை யணிந்த சடாதாரியே! முறையோ என்று அபயக் குரலிட்டுக் கூப்பிட்டால், என் அம்மானே! உன் அடியவனுக்கு அருள் புரியாது போகலாமா! (எ-று.)

உயிர்கள் அறியாமை காரணமாகத் தவறு இழைத்தால், மன்னித்து ஆட்கொண்டு அருள வேண்டியவன் இறைவனே என்பதை இப் பாட்டில் வலியுறுத்துகிறார். (1)

(இ-ள்.) ஏழை பங்காளா! என் அரசே! ஒன்றுக்கும் பற்றாத நாயினுங் கடையான என்னை முன் வலிய ஆட்கொண்டருளிய உன்னுடைய கருணை இன்று மட்டும் இல்லாது போய் விட்டதோ! எட்டு தோள்களையும் மூன்று கண்களையும் உடைய எந்தலைவனாகிய சிவபெருமானே! மலை போன்ற குற்றங்களை நான் செய்தாலும், அவைகளை யெல்லாம் குணம் என்றே தேவரீர் கொண்டால், என்ன கெட்டுப் போய் விட்டது; ஆதலால், என் பால் நீ இரக்கங் காட்டியருள்வாயாக. (எ-று.)

ஆண்டவன் கருணையே திருவுருவாகக் கொண்டவன் என்பதை, 'ஒன்றும் போதா நாயேனை உய்யக்கொண்ட நின் கருணை இன்றே இன்றிப் போய்த் தோதான்; ஏழைபங்காளா!" என்ற அடிகளில் அழகாக எடுத்துக் காட்டி யிருக்கிறார். (2)

(இ-ள்.) உயிர்கள் எந்தச் சமயத்தில் எதை வேண்டி நிற்கிறது என்பதை அறியக் கூடியவன் நீ, அவ்விதம் உயிர்கள் தத்தம் தேவைகளை வேண்டி நிற்க, அவை யனைத்தையும் வரையாது வழங்குவோன் நீ! உன்னைக் காண விரும்பி நிற்கும் பிரம்ம விஷ்ணுக்கள் கனவிலுங் காண்பதற்கு அரியவன் நீ! அப்பேர்ப்பட்ட தேவரீர் மனமுவந்து என்னை வலிய அடியானாகக் கொண்டாய்! ஆகவே, நீ விரும்பி எனக்கு எது அருள் செய்கின்றாயோ, அதுவே யானும் விரும்பி நிற்பேன் அல்லாமல், வேறு கேட்க மாட்டேன். அப்படி, நான் விரும்பி நிற்கும் பரிசு எதுவேனும் உண்டு என்றால், அதுவும் உன்னுடைய விருப்பந்தான் அல்லவா! (எ-று.)

உயிர்களுக்கு ஒரு பொருளில் விருப்பத்தையும் வெறுப்பையும் அளிப்பவன் கடவுளே, அவைகளுக்கென செயலொன்றுமில்லை யென்பதை இப் பாடலில் நன்கு எடுத்துக்காட்டி யிருப்பது கவனிக்கத்தக்கது. (3)

---




# வருக புத்தாண்டு!

இன்று தமிழ்ப் புத்தாண்டு பிறந்திருக்கிறது. சித்திர பாநு வருஷம் சிறக்கப் பொலிந் திருக்கிறது. சென்ற விஷு வருஷம் நம் நாட்டுக்கு மட்டுமல்லாது, உலக முழுவதுக்குமே விஷ வருஷமாய் இருந்தது. அதாவது அவ்வாண்டின் விளைவு, பலாபலன்கள், நிகழ்ந்த நிகழ்ச்சிகள் மிகவும் பயங்கரமானவையாய்—கொடுமைகள் நிறைந்தனவாய் இருந்தன. இவ்வாண்டாயினும், அவ்விதப் பயங்கரங்களும் கொடுமைகளும் இல்லாமலிருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறோம்.

ஐரோப்பாவில் யுத்தந் தொடங்கி ஏறக்குறைய மூன்று வருஷங்கள் ஆகின்றன. போலந்து என்னுஞ் சிறு தேசத்தை ஜெர்மனி அநியாயமாக ஆக்ரமித்ததன் காரணமாக, முதலில் மத்திய ஐரோப்பாவில் ஜெர்மனிக்கும் பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நேச நாடுகளுக்கும் இடையே மூண்ட யுத்தம், நாளடைவில், ஜெர்மனி சார்பில் இத்தாலி, ஜப்பான் முதலிய நாடுகளும், பிரிட்டன் சார்பில் ரஷ்யா, சீனு, அமெரிக்கா தேசங்களும் கலந்து கொண்டதன் பயனாக, எல்லாக் கண்டங்களிலும் பரவி, உலக மகா யுத்தமாக மாறிவிட்டது. 'லண்டன் மீது ஜெர்மனி விமானப்படையெடுப்பு எடுத்து வெடிகுண்டுகளைப் பொழிந்து, நகரங்களையும் முக்கிய கட்டிடங்களையும் எல்லாம் பாழாக்கி வருகிறது. பிரிட்டிஷ் விமான எதிர்ப்பு பீரங்கிப் படைகள் வெகு சாதுரியமாக வேலைசெய்து எதிரி விமானங்களை வீழ்த்தி வருகின்றன. பிரிட்டிஷ் விமானப் படைகள் போய் பெர்லின் மீதும், அதைச் சுற்றியுள்ள முக்கிய தொழிற்சாலைகள், ஆயுத உற்பத்திசாலைகள் மீதும் கடுமையாக வெடிகுண்டுகளை வீசி மிகுந்த சேதமுண்டு வருகின்றன. நேசமாயிருந்த ஜெர்மனியும் ரஷ்யாவும் சந்தேகக் காரணமாகச் சண்டை போட்டுக்கொண்டு ஒன்றையொன்று கடுமையாகத் தாக்கி வருகின்றன. லிபியாவில் நேசதேசப் படைகள் அச்சுப்படைகளை விரட்டியடித்து வருகின்றன. ஆல்ஜீரியப் படைகள் ஆவேசத்தோடு எதிரிப் படைகளை

எதிர்த்து வருகின்றன. இந்தியப் படைகள் போகுமிட மெல்லாம் முன்னேறிச் சென்று எதிரிப் படைகளைத் தாக்கி இணையற்ற வீரங்காட்டி வருகின்றன' என்றெல்லாம் பத்திரிகைகளில் வெளிவரும் யுத்தச் செய்திகளைப் படித்தும் பிறர்க்குச் சொல்லியும் வந்தோம். இவ்விதம் பிற தேசங்களில் நடக்கும் யுத்தத்தின் அதிர்ச்சி இந்தியாவிலும் எதிரொலி செய்து, இந்திய மக்களாகிய நம்மை வெகுவாகப் பாதித்து வந்தது. ஐரோப்பா யுத்த ஆரம்பத்திலேயே பிரிட்டன் இந்தியர்களாகிய நம்மைக் கலக்காமலே இந்த யுத்தத்தில் இந்தியாவையும் வலிய சம்பந்தப் படுத்திவிட்டது காரணமாக, இங்கு அரசியல் நெருக்கடி யேற்பட்டு விட்டது. பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின் அலட்சிய புத்தியும், பிடிவாத குணமும் இந் நெருக்கடியை இவ்வளவு காலமாக நீடிக்கச் செய்து வந்தது.

இங்ஙனமாக, ஐரோப்பாவிலும், ஆஸ்திரேலியா முதலிய பிற கண்டங்களிலும் யுத்தம் நடந்து வரும்போதே, 'இந்தியாவுக்கு யுத்த ஆபத்து அணுகி விட்டது. யுத்தம் இந்தியாவின் வாயிலைச் சமீபித்து விட்டது. இந்தியா மீதும் எதிரி படையெடுக்கக் கூடும்' என்றெல்லாம் அதிகாரிகளும் பிறரும் ஹேஸ்யங் கூறி வந்தார்கள். நாடாசை காரணமாக, பிற தேசங்களையெல்லாம் ஆக்கிரமித்து வரும் நாஜி அரக்கனும் அச்சு தேசங்களும் இந்தியாவையும் ஆக்கிரமித்துக் கொள்ள எண்ணக் கூடும் என்று நாமும் கருதி அஞ்சினோம். ஆனால், நமது தற்காப்புக்கு என்ன முஸ்தீப்பு செய்யப்பட் டிருக்கிறது? செய்ய முடியும்? என்று ஆலோசித்துப் பார்த்தபோது, நம்முடைய நிராதரவான நிலைமை புலப்பட்டு தேச மக்களை மனந்தளரச் செய்தது.

இந் நிலையில் திடீரென ஜப்பான் பஸிபிக்கில் ஆர்ப்பாட்டஞ் செய்யத் தொடங்கவே, தூரக் கீழ்த்திசையிலும் அதாவது ஆசியா கண்டத்திலும் யுத்தம் மூளத் தொடங்கி விட்டது. அப் பக்கத்தில் ஹானலூலு, மணிலா, ஹாவாய் முதலிய இடங்களை ஆக்கிரமித்துக் கொண்ட ஜப்பான் படைகள் இப் பக்கத்தில் சிங்கப்பூர், மலேயா, ஜாவா முதலிய நாடுகளை ஆக்கிரமித்துக் கொண்டு பர்மாவையும், சிலோனையும் தாக்கி வருகின்றன. பர்மாவிலும் இரங்கூன் வீழ்ந்து விட்டது. வட பர்மாவில் கடுமையான போர் நடந்து வருகிறது. கொளும்புவிலும் மும்முறைக்கு மேல் விமானப் படையெடுப்பு நடந்ததில் வெடிகுண்டு வீச்சுக்கு அது ஆகாரமாகி இருக்கிறது. எனவே, இவற்றிற்கு அடுத்ததாக்குதல் இந்தியாவில் தான் என்பதில் யாரும் சந்தேகங் கொள்ளவில்லை. இங்கு கல்கத்தாவிலும் சென்னையிலும் முதன் முதலாகப் படை யெடுப்பு நடக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் சிறிதும் எதிர்பாராத விதமாக, விசாகப்

பட்டணம் காகினடா ஆகிய இரு இடங்களை ஜப்பான் விமானங்கள் வெடிகுண்டுகளை வீசித் தாக்கியிருக்கின்றன. எனவே, இதுவரை யுத்தம் இந்தியாவை நெருங்கிக் கொண்டிருக்கிறதென்று சொல்லி வந்த நாம்—எதிரி நம் தேசத்தின் வாயிலில் இருக்கிறானென்று கூறிவந்த நாம்—இப்போது யுத்தம் இன்னதென அறியத் தொடங்கி விட்டோம். யுத்த பயங்கரம் எப்படி இருக்கும் என்று உணர ஆரம்பித்து விட்டோம். ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால், எங்கெங்கேயோ நடந்து வருவதாகக் கேள்விப்பட்டு வந்த பயங்கர யுத்தம் நம் தேசத்துக்குள்ளும் வந்துவிட்டது. ஆகவே, நம் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது என்பதில் சந்தேகமில்லை. வங்காளக் குடாக் கடலில் எதிரி கப்பற் படையின் நடமாட்டம் இருந்து வருவதாகவும், கடலிலிருந்தும் ஆகாயத்திலிருந்தும் தாக்கப்படக் கூடிய அபாயம் சென்னைக்கு அதிகரித்திருக்கிற தென்றும் சர்க்கார் கூறியிருக்கின்றனர். அது மட்டுமல்ல; சென்னை முதலிய மற்ற கடலோரப் பட்டினங்களுக்கும் இப்போது அபாய நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

இந்தியாவுக்கு அபாயம் ஏற்பட்டிருக்கும் நிலையில், தேச மக்கள் நீண்ட காலமாகக் கோரி வந்துள்ள சுயநிர்ணய உரிமையையும் வழங்கி, பிரஜைகளின் படையைத் திரட்டி போதிய ஆயுத பலத்தையும் அவர்களுக்கு அளித்திருந்தால், இப்போது எவ்வளவு சௌகரியமாக இருந்திருக்கும்? இன்னமும், தேசத்தின் பாதுகாப்பு அதிகாரத்தை இந்தியர்களிடம் மாற்றும் விஷயத்தில் அதிகார வர்க்கம் மீனமேஷம் பார்த்துக்கொண்டிருக்கிறது. 'இந்தியப் பாதுகாப்பு மந்திரியின் கீழ் வேலை செய்ய பிரிட்டிஷ் அதிகாரிகள் விரும்பமாட்டார்கள் என்பதை உத்தேசித்து தயக்கம் காட்டுவதாயின், அதைக் காட்டிலும் கெடுதல் ஒன்றுமில்லை' என்று மிஸ்டர் பிரெயில்ஸ்போர்டு என்னும் பிரிட்டிஷ் பிரமுகரொருவரே எச்சரிக்கை செய்திருக்கிறார். ஆகவே, நெருக்கடியைச் சமாளிக்க வேண்டி, இந்தியரின் பரிபூரண ஒத்துழைப்பைப் பெறுவதற்காகப் பிரிட்டிஷ் யுத்த மந்திரிசபை அனுப்பியுள்ள ஸர். கிரிப்ஸின் தூது வீணாகாமற் போக வேண்டுமானால், அவர்கள் பிரெயில்ஸ்போர்டு போன்றோர் புத்திமதியை ஏற்று, காங்கிரஸ் காரியக் கமிட்டியின் ஆலோசனைக்கு இணக்கங் காட்டிச் சௌஜன்யமான நிலைமையை ஏற்படுத்த வேண்டும்.

எப்படியோ இன்று பிறந்திருக்கும் சித்திரபானு வருஷம் நம் நாட்டையும் உலகத்தையும் பீடித்துள்ள யுத்த பீடை முதலிய பல பீடைகளையும் போக்கி, சுபோதயத்தை யுண்டாக்கும் என்ற நம்பிக்கையோடு, புத்தாண்டை வரவேற்கிறோம்.

# சாந்தி

(D. ராஜகோபால்.)

என் மனம் சதா சாந்தியை நாடிக்கொண் டிருக்கிறது. சாந்தி தேவியின் பாதங்களில் விழுந்து ஆர்வம் தீர வணங்க என் உள்ளம் துடி துடிக்கிறது. உள்ளம் எவ்வளவுக் கெவ்வளவு ஆவல் கொண்டு துடிக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு சாந்தி தேவியும் என்னை விட்டுத் தூர விலகி விடுகிறாள். கானல் நீரைக் கண்டு கலங்கும் கலை மானைப்போல் என் மனமும் கலங்கித் தவிக்கிறது. மனக்குகையின் அந்தகாரத்தி னிடையே ஓரோர் சமயம் மின்னல் போலத் திடீரென்று தோன்றி மறையும் சாந்தியின் சின்னத்தைக் கண்டு சாந்தி தேவியின் சாந்நித்தியத்தையே அடைந்து விட்டதாக உள்ளம் துள்ள வாரம்பிக்கும். ஆனால் அந்தோ! மறு விநாடி ஒரே அந்தகாரம் தான். ஏங்கித் தவிக்கும் இந்த உள்ளத்திற்கு விமோசனமே—சாந்தியே—கிடைக்காதா?

மனித வாழ்விலே சாந்தி யென்பது குதிரைக் கொம்பாகத் தோன்றுகிறது. வாழ்க்கையே ஒரு பெரும் ஏமாற்றமா? கண், மண் தெரியாது மேடு பள்ளங்களை யறியாது வாழ்க்கைப் பாதையில் ஓட ஆரம்பித்து விடுகிறது அச்சில்லாத இந்த வண்டி. குடை சாயாமல் சிறு மேடு பள்ளங்களைச் சமாளித்துக்கொண்டு ஓடிக் கொண்டிருக்கும் வரை மனத்தில் ஆனந்தத் தாண்டவம் தான். சாந்தி கிடைத்து விட்டதாகக் கூறிக் களிப்படையும் பேதை மனம். திடீரென்று வண்டி கவிழ்ந்தடித்து விழுகிறது. சாந்திக் கனவு—ஆனந்தக் கனவு—கண்டு கொண்டிருந்த பேதை மனம் திடுக்கிட்டுத் துள்ளுகிறது. உலகமே ஏமாற்றமாகத் தோன்றுகிறது. மனதிலே வைராக்கியம் பிறக்கிறது. துக்கத்தை, வேதனையை மறைக்க உள்ளம் வேதாந்தத்தை நாடுகிறது. உலகமே அநித்யம் என்று கூறிக் களிக்கிறது. என்ன ஆச்சரியம் காலக் கிரமத்தில் கவிழ்ந்த வண்டி நிமிர்ந்து செல்ல வாரம்பிக்கிறது. வேதாந்தம், ஞானம், பக்தி வைராக்கியம் எல்லாம் பறந்து விடுகின்றன. ஆனந்தக்களி நடம்புரிகிறது கள்ள உள்ளம்.

எனக்கு வாழ்க்கையே கசந்து விட்டது. மனம் சதா சலித்துக் கொண் டிருக்கிறது. எனக்கு உலகம் சாந்தி மயமானதாகத் தோன்றுகிறது. உலகத்திலுள்ள சகல ஜீவன்களும்—என்னைத் தவிர—சாந்தி மயமான சந்தோஷ வாழ்க்கையை அனுபவிப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் என் உள்ளம் மட்டும் காமக்குரோத லோப மோக மத மாச்சர்யங்களாகிய வைரிகளின் போர்க்களமாக விளங்குகின்றது.

அதோ போகிறாரே ஒரு பெரிய மனிதர். அவர் தான் இந்த ஊரிலேயே சிறந்த பணக்காரர். கவலையற்ற வாழ்க்கை. நினைத்ததை நினைந்தவாறு செய்யும் ஆற்றல் படைத்தவர். பணம் படைத்தவரால் ஆகாத காரியமும் உண்டா? அவரைக் காணும் போதெல்லாம் என் மனம் பொறாமை கொண்டு கொதித்தெழும். பொறாமை என்றால் கெட்ட எண்ணத்தினால் உண்டான பொறாமையல்ல. "அவருடைய வாழ்க்கையில் அவர் சாந்தியை அனுபவிக்கிறார். கவலையற்ற வாழ்வு வாழ்கிறார். அவரன்றோ பாக்கியசாலி. நமக்கு மட்டும் சாந்தியின் சாயல் கூடக் கிட்டமாட்டேன் என்

கிறதே" என்று என் மனம் ஏங்குகிறது. அவர் மட்டுமல்ல, நான் பார்க்கும் எல்லோருமே சாந்தி மயமான வாழ்வை அனுபவிப்பதாகவே தோன்றுகிறது. அவர்களைப் பார்க்கும்போதெல்லாம் நானும் அவர்களில் ஒருவராக ஆகி விடக்கூடாதா என்று ஏங்குகிறது என் மனம். ஆனால் அது சாத்தியமா?

என்ன ஆச்சரியம்! நான் பறக்கிறேன். என் உடல் எங்கே? உடலில்லாமல் நான் மட்டும் பறக்கிறேன். பறந்து பறந்து சாந்தி தேவியின் பிரதிநிதியாகத் தோன்றிய அந்தச் செல்வரின் இல்லத்திற்குச் செல்லுகிறேன். இது என்ன? கனவா அல்லது நனவா? நான் அவருடைய உள்ளத்தின் ஒவ்வொரு துடிப்பையும் நன்றாக அறிகிறேன். நான் அவராகி விட்டேன். அவர் நினைப்பதெல்லாம் என் மனதில் நினைப்பதாகவே தோன்றுகிறது. ஆஹா! ஆனந்தம்! ஆனந்தம்! சாந்தியின் சாந்நித்தியம் கிடைக்கா விட்டாலும் சாந்தி தேவியின் அத்யந்த அன்பரின் மனதில் வாசம் செய்யும் பாக்கியமாவது கிடைத்ததே. அதுவே போதும் என்று அகமகிழ்கிறது என் மனம். ஆனால் அந்தோ! என்ன பரிதாபம்? இவருடைய ஹிருதயம்—சாந்தியின் சந்நிதானம்—ஊளுத்ததல்லவோ இருக்கிறது. புத்தகத்தை செல்லரிப்பது போல் உள்ளத்தைக் கவலைகள் அரித்துக் கொண்டேயிருக்கின்றன. எண்ணற்ற எண்ணங்கள் எழுகின்றன. "வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாகப் பரவிவரும் இந்நாட்களில் கொள்ளைக் கூட்டம் பெருகும் போலத் தோன்றுகிறதே. என்ன செய்வது? ஊரில் நாம் தானே பணக்காரன். நம் வீட்டில் கொள்ளைக்காரர்கள் புகுந்து விட்டால் ..........." மேலே நினைக்கக் கூட முடியவில்லை. நெஞ்சு துடி துடித்தது. அத் துடிப்பைத் தாங்காமல் மூர்ச்சையடையும் நிலைமையை அடைந்து விட்டது மனம். இது கவலைக் கடலின் ஒரு அலை. உடனே தொடர்ந்து வேறு அலைகள் அலைக்க வாரம்பிக்கின்றன. "விலைகள் ஏறுமென்று இத்தனை சரக்குகளைக் கொள் முதல் செய்து வைத்திருக்கிறோமே. ஆனால் நிலைமை மோசமாக இருக்கிறதே. திடீரென்று நிலைமை மோசமாகி விலைவாசி குறைந்து விட்டால் நம் கதி..!........." அப்பா! போதும் போதும் இந்தத் தொல்லை. அவருடைய கவலைகள் எல்லாம் என் கவலைகள் போலத் தோன்றி என்னை வருத்துகின்றனவே. வேண்டவே வேண்டாம், இந்த வாழ்வு. பணத்தினால் அல்லவா இத்தனை கவலை. வாழ்க்கைத் தேவைக்கு மட்டும் தகுந்த பண வருவாயுள்ள உத்தியோகஸ்தனின் வாழ்வே மேல். இவ்வாறு எண்ணுகிறது என் மனம்.

நான் மறுபடியும் பறக்கிறேன். அதோ போகிறானே அந்த மனிதன். "ஆபீஸில்" வேலை. ஏதோ வருவதை வைத்துக்கொண்டு சாந்தியுடன் வாழ்கிறான். நான் அவனானால்..................அடே! இது என்ன? நான் அவனாகி விட்டேன். ஆஹா! என்ன ஆனந்தம்? கவலையற்று சாலையில் வேடிக்கை பார்த்துக் கொண்டே செல்லுகிறேன். அதோ ஒரு வீடு தெரிகிறதே! அது இப்பொழுது என் வீடு. என் மனம் மகிழ்ச்சியடைகிறது. கடைசியில் சாந்தியின் கடாட்ச வீட்சண்யத்தை அடைந்து விட்டேன். ஆனந்தமாக அகத்தில் நுழைகிறேன். கட்டுக்கடங்காத மகிழ்ச்சியில் திளைக்கு மனம் கடிவாளம் போட்ட குதிரை போல் 'தட்' டென்று நின்று விடுகிறது. வீட்டில் ஒரே ரகளை. பக்கத்துவீட்டுப் பருவதம்

சாப்பிட்ட பாதாமி ஹல்வா வேண்டுமாம் பெண்ணுக்கு. தாயார் எவ்
வளவு சமாதானம் செய்தும் கேட்கமாட்டேனென்கிறது. தாயார் வைக்
கிறாள் ஒரு பூசை. குழந்தை 'வீல்வீல்' என்று கத்துகிறது. மற்ற குழந்
தைகளும் சூழ்ந்துகொண்டு, அது வேண்டும் இது வேண்டும் என்று நச்ச
ரிக்கின்றன. சாப்பாட்டிற்கே சரிக்கட்ட முடியாத வரும்படியில் ஆடம்
பரச் செலவுக்கு எங்கே போவது? வறுமைப் புயலின் வலிமையைச்
சாந்திச்சுடர் எதிர்க்க முடியாமல் கீழ்ப்படிகிறது. சாந்திச் சுடர் அவிந்து
அந்தகாரம் பரவுகிறது. மனம் சலிக்கிறது. "சீசீ! இதுவும் ஒரு வாழ்வா!
'ஆபீஸில்' தான் சதா 'சள்ளுபுள்' ளென்று சினந்து விழும் முதலாளி
யிடம் ஒரு நாள் கழிவது ஒரு யுகமாகத் தோன்றுகிறது. வீட்டிலாவது
நிம்மதியுண்டாவென்றால் அதுவுமில்லை. போதும் போதும் இந்த வாழ்வு"
என்று மனம் வாய் விட்டலறுகிறது. என் மனமும் வருந்துகிறது. இந்த
இடத்தை விட்டு அகன்றால் போதுமென்று தோன்றுகிறது.

நான் மறுபடியும் பறக்கிறேன். பறந்து பறந்து நாட்டின் எல்லை
யைத் தாண்டி காட்டின் எல்லையைக்கூட அடைந்து விட்டேனே. ஆம்,
நாட்டிலகப்படாத சாந்தி காட்டில் தான் இருக்கவேண்டும். பெரியோர்
கள் கூடச் சொல்லியிருக்கிறார்களே. ஆஹா! இதுவரை அது நினைவிற்கு
வரவில்லையே. அதோ! அந்தக் குகையில் பத்மாசனத்தில் வீற்றிருக்கும்
அவர் ஒரு பெரிய தவசியாகத் தானிருக்கவேண்டும். சித்தத்தைக் கட்டுப்
படுத்த வல்ல சித்தரிடம் சாந்தியில்லையென்றால் வேறு எங்கே அது
இருக்கப்போகிறது? அவர் கண்டிப்பாக சாந்தியின் சிகரத்தை யடைந்த
சித்த சுத்தராய்த்தா னிருக்கவேண்டும். என் மனம் ஆனந்தமடைகிறது.
இதோ நான் அவரேயாகி விட்டேன்.

இது என்ன? உள்ளிருந்து உணர்வது நானா அவரா? அவரானால்
ஏனிந்த நீச புத்தி? உணர்வது நானாகத்தா னிருக்க வேண்டும். இல்லா
விட்டால் என் கள்ள உள்ளத்தின் கறைதான் அவர் மனத்திலும் உறைந்து
இம்மாதிரி நினைக்கத் தோன்றுகிறதா? இல்லை. நிஜமாகவே அவர் தான்
இப்படி நினைக்கிறார். அவருக்குத் தனி வாழ்வு சலித்து விட்டதாம். நா
ளையே நாட்டிற்குச் செல்லவேண்டுமாம். எத்தனை நாளைக்குத் தான் தனி
யாக இருந்து துன்புறுவது! இல்வாழ்க்கையி லிறங்கி இன்பங் காண
வேண்டுமாம். பேயறைந்தவன் போல ஓடுகிறேன் நான்.

ஏமாற்றம் ஏமாற்றம். எங்கும் ஒரே ஏமாற்றம். பணக்காரன், ஏழை,
முதலாளி, தொழிலாளி, கிழவன், குமரன், சந்நியாசி, சம்சாரி எல்லோ
ருடைய வாழ்வும் ஒரே மாதிரி துன்பக்காடாக வன்றோ இருக்கிறது? சாந்
தியின் சாயல் கூடக் காணோமே. அலைந்த சிரமம் ஆளைக் கீழே தள்ளி விடு
கிறது.

கனவு காண்கிறேன். ஆம். கனவு தான் காண்கிறேன். யாரோ ஒரு
திவ்ய புருஷர் என்காதில் உபதேசிக்கிறார்.

"அன்பனே! சாந்தி மார்க்கத்தைக் கூறுகிறேன். கேள். உயிர்களி
டத்தில் அன்பு காட்டு. அன்பே சிவம்; அதுவே சாந்தி. பற்றை நீக்கி எண்
ணம் நிறைவேறுவதும் நிறைவேறாததும் ஒன்றெனக் கருதித் தொழில்

# எய்ய வந்த காமன்!

(R. P. M. கனி.)

மன்மதன் ஒரு அபேதவாதி. அவனுக்குச் சாதி மதம் கிடையாது. உயர்வு தாழ்வு கிடையாது. அரசனும், ஆண்டியும், தோட்டியும்-தொண்டைமானும் அவனுக்கு ஒன்றுதான். குப்பைமேடும் குபேர அரண்மனையும், பறையர் சேரியும் பார்ப்பனர் தெருவும் அவன் ஒரே கண் கொண்டுதான் நோக்குவான். இத்தகைய காமன் 'ஒரு சரம் கருத்தின் எய்தால்' அம்பு பட்டோர் 'எரியிடை யிட்ட விறகென' அவஸ்தைப்படுவர்.

இத்தகைய மதனன் கணை ஒரு கன்னியின் மார்பில் பாய்ந்தது. அவள் ஓர் இளவலின்மேல் ஆராக் காதல் கொண்டாள். அவளைத் தென்றல் தீயெனத் தகிக்கிறது. அவள் உள்ளம் தூண்டிற் புழுவினைப்போல் துடிக்கிறது. கூண்டுக்கிளியைப் போல் அவள் தனிமையால் வாடுகிறாள். மலரும் மணங் கொடுக்கவில்லை. தண்ணிய பன்னீரும் உடம்பை வெதுப்புகிறது. தாயின் வார்த்தைகளும் சலிப்புத் தட்டுகின்றன. கிளிமொழியும் காதில் குத்தல் எடுக்கிறது. உணவு செல்லவில்லை. மலரணையும் முள்ளணை யாகிறது.

இவ்வாறு மதனன் கணை வருத்துகிறது. காலையில் அரும்பிய காதல் நோய் பகலெல்லாம் போதாகி மாலையில் மலருகிறது. இரவும் வருகிறது. சந்திரனின் தண் கதிர்கள் அவளைச் சுடுகின்றன. ஊரெல்லாம் துஞ்சி விட்டது. மாக்களும் அடங்கினர். பித்தருங் கூடத் தூங்கி விட்டனர். ஆனால் இத் தலைவிக்குத் தூக்கம் வரவில்லை.

> 'மைவிட்ட கண் அருவிவார, வளைசோரக்
> கையில் கபோலத் தலம் வைத்து—மெய்வருந்தி,
> தேனிருந்த பூங்கணையே தீயாகத்தே மொழியாள்
> தானிருந்து செய்வாள் தவம்.'

இவ்வாறு ஊன்றிய கையின்மேல் முகத்தை வைத்துக் காதல் தவம் புரிகிறாள் கன்னி. "தெய்வங்காள்! என் செய்கேன்? ஓரிரவு ஏழூழியாய் மெய்வந்து நின்று எனதாவி மெலிவிக்கும்" என அங்கலாய்க்கிறாள்.

---

செய். தோல்வியைக் கண்டு கலங்காமலும், வெற்றியைக் கண்டு மகிழ்ச்சிக் கூத்தாடாமலும் இருக்கக் கற்றுக்கொள். ஆசையே கவலையின் வித்து. செய்யும் செயல்களை முற்றும் ஈசனுக்கெனத் துறந்துவிட்டுச் செய். அதுவே சாந்தி யோகம். அதையே கண்ணன் கீதையில் இசைத்தான்."

சாந்திக்கு வழி கிடைத்துவிட்டது. வழி என்னவோ சுலபமாகத் தான் தோன்றுகிறது. ஆனால் அதன்படி நடக்க முடியுமா என்று மனம் மறுபடியும் ஐயுறுகிறது. பார்ப்போம். கூடிய வரை முயன்று பார் என்று யாரோ என்னுள்ளிருந்து கூறுகிறார். அவர் சொன்னபடி அவருக்கே என் முயற்சியை அர்ப்பணிக்கத் தீர்மானித்து விட்டேன்.

பொழுதோ போகே னென்கிறது. அவளுக்கோ இருக்கை கொள்ளவில்லை விடியுங் குறி யொன்றுங் காணாது விம்முகிறாள்:

"ஆழிவாய்ச் சத்த மடங்காதோ? யான் வளர்த்த
கோழிவாய் மண் கூறு கொண்டதோ?—வாழி
திரண்டதோ? கங்குற் றினகரனுந் தேரும்
உருண்டதோ பாதாளத் துள்?"

என மயங்குகிறாள். கடலின் ஒலியும் அடங்கும் வழி காணோம். கோழி கூவும் வகையுமில்லை. சூரியனுடைய தேர் பாதாளத்துள்தான் விழுந்து விட்டதோ என சந்தேகிக்கிறாள். 'இரவிதான் இறந்து விட்டானோ' எனக் கொதிக்கிறாள்.

இவ்விதக் கஷ்டங்களுக் கிடையே 'அந்தப் பாவி' இரவும் விடிகிறது. இனி காமன் கணைக்கு ஆற்ற முடியாது என நினைக்கிறாள் தலைவி. தான் காதல் கொண்ட இளவலிடந் தூதனுப்பத் துணிகிறாள். பெண்பால் முதலில் தூதனுப்புவது சரியன்று எனத் தெரிந்தும் துணிந்தே தூது விடுக்கிறாள். அவ்வாறு விடுப்பவள் தன்னை அந்நிலைக்குக் கொண்டுவந்த மதனனை நிந்திக்கிறாள்:

"தாயுடுத்த சேலையைக் கவர்ந்தடித்த பாவி
தமையனது குடியிருப்பைத்தான் பறித்த பாவி
தேயுடற்றன் மாமனைத் தன்னானை குளிப்பாட்டச்
சிவனைத்தன் குடைசுமக்கச் செய்த கொடும்பாவி
பேயிடத்து முலைகுடித்த பிதாவின் விளங்கும்
பெரும்பாவி எனைக்குதிரை பிடிக்க வைத்த பாவி."

என்று அவனைத் தூற்றுகிறாள். பிறவியிலேயே பெரும்பாவி, தன் சுற்றத்தார்க்கே துரோகஞ் செய்த பாவி எனத் திட்டுகிறாள். மன்மதன் போர் தொடுக்குங் காலத்தே தனது உற்றோர் உரிமைகளைப் பறிப்பதையும் உறவினரை வேலை வாங்குவதையுந்தான் தலைவி இங்கு பேசுகிறாள். அவளது கூற்று நன்கு விளங்க மன்மதனது போர்க்கோலங் காட்டும் ஒரு பாட்டை மனதில் வைத்துக் கொள்வோம்:

"ஆலைக்கரும்பு சிலை; ஐங்கணைபூ[2]; நாண்சுரும்பு
மாலைக்கிளி புரவி[5]; மாருதம்தேர்—வேலை
கடிமுரசம்[1]; கங்குல் களிறு[3]; குயில்காளம்
கொடுமகரம்; திங்கள் குடை[4]."

[சுரும்பு—வண்டு, வேலை—கடல், காளம்—கொம்பு.]

சீராருங் கடலுடுத்த நிலமகள் மன்மதன் தாய். தாயின் சேலை மகன் முரசம் 1. அதைக் கவர்ந்தடித்தவ னென்கிறாள் தலைவி. நான்முகன் திருமாலின் மகனல்லவா? அதனால் அவன் மன்மதனுக்கு அண்ணனாகிறான்.

அண்ணன் வாசஞ் செய்வதோ தாமரைமலர். அது தம்பியின் ஐங்கணைக ளுள் ஒன்று 2. ஆகவே, மதனன் அண்ணன் குடியிருப்பைப் பரித்தவனு கிறான். மன்மதன் அன்னையான திருமகள், அதாவது திருமாலின் மனைவி திருப்பாற் கடலில் தோன்றினாள். அவளுடன் அக்கடலில் பிறந்தவன் தான் சந்திரன். அதனால் சந்திரன் திருமகளுக்குத் தம்பியாகவும், மன்மத னுக்குத் தாய் மாமனாகவும் ஆகிறான். இத்தகைய மாமனோ (பூரண உருவ மானதும்) தேயும் உடல் பெற்றவன். அவனைத் தனது யானையாம் கங் குலை3 வெளுக்கச் செய்கிறான். ஆகவே, சந்திரன் இவன் யானை குளிப் பாட்டி யாகிறான். முக்கட் கடவுள் சிவன் இவனது குடையைச் சுமக்கிறார். தனது பவனியின்போது விரித்திருக்கும் (பூர்ண) சந்திரனாகிய குடை யைச்4 சுருக்கிச் சிவனாருடைய சென்னியில் தொங்க விட்டிருக்கிறான் காமன். இவ்வாறு உற்றார் உறவினரை வருத்தும் இவன் இத் தலைவியைத் தனது குதிரை பிடிக்கும்படி செய்து விட்டான். அதாவது இவனுடைய புரவியான5 கிளியைப் பிடிக்கும் நிலைக்குக் கொண்டுவந்து விட்டான். ஏன்? கரும்பு வில்லைக் கையில் கொண்டு பூங்கணைகளைச் சுரும்பு நாணிற் றொடுத்து கிளிவாகன மீதிருந்து மந்தமாருதத் தேர் ஊர; குயிலின் குரல் கொம்பூத, கடல் முரசம் முழங்க (பகல் பொழுதில், காலை நேரத்தில்) வந்து போர் தொடுத்து ஓர் இளவல்மேல் காதல் கொள்ளும்படி செய்து விட்டானல்லவா? ஆகவேதான், சிந்தித்துக் கொண்டுதான் காதல் கொண்ட தலைவனிடம் கிள்ளையைத் தூதனுப்புகிறாள் தலைவி.

இவ்விதமாய் அனுப்பிய தூது பலன் தருகிறது. அன்று மாலையே அவ்விளவல் அவளை யடைகிறான். அவளுக்கு உச்சி குளிர்கிறது. உடம்பு சோர்கிறது. மனதில் இன்பம் குடிகொள்ளுகிறது. குயிலின் இனிய குரலும் தென்றலின் சுகமும் அவளுக்கு இப்பொழுது மகிழ்ச்சி யூட்டுகின்றன. ஆனால் கூவுங் குயிலும், வீசுந் தென்றலும், சப்திக்குங்கடலும், வெண் தாழி போல் எழும் சந்திரனும் மன்மதனது பவனியை நினைப்பூட்டுகின்றன. இன்னும் ஏன் அவன் அவ்வழியாக வருகிறான்? என்று தலைவி எண்ணு கிறாள். கையில் கரும்புவில், மலர் அம்புகள் இவற்றுடன் மந்தமாருதத்தில் மதனன் தோன்றுகிறான் தலைவியின் மனக்கண்முன்னே. அவனை அவள் ஒரு பேடி என இடிக்கிறாள்:

"எய்யவந்த காமா, இனி உனக்கு வேலையிங்கேன்?
உய்ய வந்தான் தன்னோடும் உறவானேன்......
பையவே தேரைவிட்டு, வெண்கரும்பைத் தின்றுவிட்டு
செய்யவந்த போரைவிட்டுப் பூமுடித்துப் போ,"

என்று எள்ளி நகைக்கிறாள். "நான் யாரை அடையவேண்டுமென்று நீ நினைத்தாயோ அவரைத்தான் நான் அடைந்து விட்டேனே. இனியும் நீ யேன் தலைகாட்டுகிறாய். உன் தென்றல் தேரைப் போக்கில் விட்டு விட்டு, வில்லாகிய கரும்பைத் தின்று விட்டு, எய்யவேண்டிய மலர்களைத் தலையில் சூடிக்கொண்டு உன் பூவழகு தோன்றப் போ" என்று பொருள் படும்படி பரிகசிக்கிறாள்.

---

# "தலையில்லாத ஆமை"

(புதுவை—வேதானந்த தாஸன்.)

இருநூறு வருடங்களுக்கு முன் ஐரோப்பா தேசத்தில் கடற்கரையோரத்தில் ஒரு பெரிய ஆமையானது தலையில்லாமல் ஒதுக்கப்பட்டிருந்ததாம்.

இதைக் கண்ட அத்தேயத்தவர்கள் யாவரும் பார்த்து மிகவும் அஞ்சி நடு நடுங்கினார்களாம். மேலும் இவ்வளவு பெரிய ஆமைக்குத் தலையில்லாமலிருந்தும் ஜனங்களுக்குத் தீங்கிழைத்து வந்ததாம். இதைக் கண்ட ஜனங்கள், இதனால் விபத்து ஏற்படும் என்றெண்ணி, அதைக் கப்பலில் ஏற்றிக் கொணர்ந்து ஆசியா தேசத்தில் விட்டார்களாம்.

அவ்விடத்திலும் மேற்கூறியவாறு ஜனங்களுக்குத் தீங்கிழைத்து வந்ததாம். அந்த உபத்திரவம் தாளாமல் அத்தேயத்தார்களும் அதைக் கப்பலேற்றிக் கொண்டுவந்து இந்தியாவில் விட்டார்களாம்.

அந்த ஆமையானது மிக்க பயங்கரமாகத் தோன்றியமையால் நம் இந்திய மக்களில் சில நிபுணர்கள் அதைப் பரிசோதிக்கத் தொடங்கினர். அவ்வாறு பரிசோதித்தபோது அது தன் தலையை வெளிக்குக் காட்டாமல் மறைத்து உள்ளடக்கி வைத்திருந்ததைக் கண்டார்கள். அதன் தலையையும் அதன் உடலையையும் ஏககாலத்தில் உற்று நோக்குழி பயங்கரம் ஏற்படுமாம். அதைக் கண்டோரனைவரும் ஒருவர்க்கொருவர் பற்பல விதமாக அதனாலேற்படுந் துன்பத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்தார்களாம். அப்படி ஆராய்ச்சி செய்தவர்களில் ஒருவர் கூறியதாவது:—

"ஐயோ! இந்த ஆமை மிகக் கொடியது! இது இருந்தால் ஜனங்களுக்குத் துன்பமே நேரிடும். இதனாலேற்படும் தீச்செயல் போல் வேறெந்த பிராணியாலும் நமக்குத் துன்பம் நேரிடாது போல் தோன்றுகிறதே!

இந்த ஆமையானது ஜனங்களை ஒருவரோடொருவர் மனந்தாளாண்மைக் குள்ளாக்கி விடும். இதுவே கலகத்திற்குக் கர்த்தாவாகவும் இருக்கும்.

அம்மம்ம! கொடிது கொடிது இந்த ஆமை!

ஐயோ! இந்த ஆமையைத் தரிசிப்பவன் அன்னியனைப் போல் தானும் மேலேற முயல்வதற்கு வேண்டிய முயற்சிகளை அடையான். அன்னியனது குற்றங்களை யெடுத்து வெளியில் தூற்றுவதே நாட்டமா யிருப்பதுவு மல்லாமல், பிறனுடைய உயர் பதவியை வேண்டுமென்று நினைப்பதையும் தன் வேலையாகக் கொள்வான். ஆகையால் இந்த ஆமை விரோதத்தையும் பிரிவினையையும் உண்டாக்கும்" என்று அவர் கூறினர்.

இது கண்டு யாவரும் அதைக் கொன்று போட்டார்கள். சில வாண்டுகள் கழித்து மறுபடியும் அது புத்துயிர் பெற்று நம் இந்தியாவில் இக்காலத்திலும் வாழ்ந்துகொண்டிருப்பதாகச் சொல்லுகின்றனர். கொன்று போட்ட பின்பும் மறுபடி புத்துயிர் பெற்றதற்குக் காரணம், அது முன் ஜென்மத்தில் ஒரு பெரும் பாவியாக இருந்திருக்கலாம் என்றும் மாதவசிகளால் வாமனாவதாரச் சாபம் பெற்றிருக்கலா மென்றும் நாம் நிர்மானிக்க

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 15. வியாழன்—அதன் பால்மதிகள்

நிலவுலகினுக்கு ஒரு சந்திரன் இருப்பது கண்கூடு. செவ்வாய் உலகினுக்கு இருமதிகள் உள்ளனவென்று அறிந்திருக்கின்றோம். சந்திரன் இல்லாதது புத உலகம். ஆனால், இந்த வியாழ உலகைச் சுற்றிலும் சந்திரன்கள் ஒன்பது எனக் கண்டிருக்கின்றனர் வானநூல் வல்லுநர். அந்த ஒன்பது சந்திரர்களுடன் கூடிய வியாழன் தோற்றத்து ஒரு சிறு சூர்ய அண்டமென இலங்குகின்றது. இந்தக் காட்சியையும்—மற்றும் பல விவரங்களையும் தொலையறி கருவி (Telescope) யின் வாயிலாகக் காணக் கூடியதாகும்.

எம்முடைய சந்திரனை ஒத்த குறுக்களவு கொண்டன இரண்டு அந்த ஒன்பது மதிகளுள்ளும் என்கின்றனர். ஆனால், அவற்றுள் ஒன்று ஆயிரத்து தொள்ளாயிரத்து அறுபது மைல்கள் குறுக்களவில் இருக்கின்றது; மற்றொன்று இரண்டாயிரத்து முன்னூற்று இருபது மைல்களாம். மற்றும் இரு சந்திரர் புத உலகை ஒத்த பரிமாண முடையன. அவை ஒவ்வொன்றின் குறுக்களவும் மூவாயிரத்து இருநூறு மைல்கள் உள்ளன. இந்த நான்கும் தவிர்த்து எஞ்சிய ஐந்தும் மிகச் சிறியன. இவற்றுள் இறுதியாகவுள்ள ஒன்பதாவது மதி மட்டும் வியாழனை எதிர்வசமாக சுற்றி வருகின்றது. நேர்வசத்துச் சுற்றி வருவனவற்றுள் நான்கு பெருமதிகளும் அதிவிரைவாக இடம் மாறுவனவாம். அவை வியாழனுக்கு ஒரு புறத்து ஏககாலத்தே காட்சி தருகின்றன. ஏனைய மதிகள் சில நாட்களில் ஒருபக்கத்துச் சிலவும்-சில நாட்களில் மற்றொரு பக்கத்துச் சிலவும் தோற்றி வரும். அவையெல்லாம் வியாழனைச் சுற்றி வருகையில், கிரமமான பொழுதுகளுள் வியாழனுடைய நிழலில் (Shade) மறைந்து-மறைந்து தோன்றிக் கொள்ளுமாம். அதைக்கொண்டு ஒளியின் வேகம் கி. பி. 1675-ல் கண்டு பிடிக்கப்பட்டது.

---

வேண்டியதிருக்கிறது. இந்த ஆமையின் தீச்செயல்களை விரிவாய்க் காண விரும்பும் அன்பர்கள் யாவரும் வள்ளுவருள்ளமாகிய திருக்குறளில் ஆற்றாமை என்னும் அதிகாரத்தில் காணலாம். அந்த ஆமை தான் இப்போது தென்னிந்தியாவில் இக் காலத்தில் பொறாமை என்று பெயர் வழங்கப்பட்டு வருகிறது.

ஆதலால் நாமெல்லோம், இது காறும் தன் தலையை வெளிக் காட்டாதிருந்த வஞ்சகமான ஆமையின் பால் வசப்படாமல் இன்புற்றிருக்க எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவோமாக.

இதன் மேற்பரப்பின் நிலைகளை இன்னும் சரியாகக் கண்டுகொள்ளக் கூட வில்லை. என்றாலும், இது வீசி வரும் ஒளியின் மூலம் சில அபூர்வங்கள் காணக் கூடுமானதாக விருக்கின்றது. இதன் ஒளிவீச்சின் காரணமும் திட்டமாக நிச்சயிக்கப் பெறவில்லை. அதைச் சுற்றிய அடர்த்தியான காற்றுமண்டலம் வியாழனைப்பற்றிய சில விவரங்களைத் தெய்வ ரகசியம் போன்று காணக்கூடாத விதம் மறைத்திருக்கின்றதென்கின்றனர்.

இதன் ஒளிவீச்சின் மூலம் வடிவமோ—இயலோ நிச்சயிக்கக்கூடாது போயினும், அதன் காட்சி யின்பம் அமைதி நிலவிய உபசாந்தத்தைத் தருகின்றது என்று மேலைதேயத்துப் பழங்காலத்துக் குடிகள் கடவுளின் தோற்றத்திற்குரிய நிலையாக மதிக்கின்றனர். கி. பி. பனிரெண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே இருந்து வந்த இது சம்பந்தமான வழிபாட்டு முறை தெற்கு ஐரோப்பாவில் புதிப்பிக்கப் பெற்றதென்று தெரிகின்றது. மத்ய ஐரோப்பாவில் வாழ்ந்து வந்த சரித்திர காலத்திற்கு முந்திய-அதாவது இற்றைக்கு முப்பது நூற்றாண்டுகள் முன்னமுள்ள மக்கள், சாந்திக்குரிய தெய்வத்தின் திவ்ய தோற்றமாகக் கண்டதும்-கொண்டதும் இந்த வியாழனே யாகும். உண்மையில், இதன் ஒளியின்பம் உயர்ந்த ஒரு அரிய காட்சி விருந்தே. அத்துடன் மட்டுமல்ல; அறிவினர் விரும்பும் உபசாந்தம் தரவல்லது ஒன்றாகும். மீனங்களுள் (நக்ஷத்திரங்களுள்) மிகச் சிறிய தோற்றத்தில் கூட வில்லாத-அதிகம் விளக்கமற்ற இதன் ஒரு வீச்சு மிகவும் உயர்வுக்குரியதாகக் கருதப் பெறுகின்றது.

கதிர்மறைவின் பின் மேற்றிசையில்-அல்லது அதன் உதயத்தின் முன் கீழ்த்திசையில்-அல்லது இரவில் கிழக்கு அல்லது மேற்கு அடிவானின் சற்று உயரத்தில் (Horizon East or West) உதயமாய்க்கொண்டு அல்லது அஸ்தமனமாய்க் கொண்டு தோன்றும் இதன் காட்சி மிகவும் இனிமைக்குரியது. நின்மலமான நிறைமதிப் பொழுதிற்கூட, அதன் ஒளியையும் ஓர்பால் மழுங்கச் செய்யும் அதி தீக்ஷண்யம் வாய்ந்த ஒளிவீச்சுக் கொண்டது வியாழன். நிறமற்ற ஆறாலும் நிறங்கள் யாவற்றினுக்கும் ஆதாரமானது என்னும்படி இதன் அழகு அமைதிக்குரியதாக விருக்கும்.

## எடையும்—இறுக்கமும்

பரிமாணத்தில் பூமியைப்போல ஆயிரத்து இருநூறு மடங்கு பெரியது வியாழன்; எனினும், எடையில் பூமியினும் முன்னூற்றுப் பதினேழு பங்குதான் அதிகமாக வுள்ளது. பரிமாண அளவிற்கேற்ப இருக்கவேண்டிய அளவிற்கு எழுபத்து ஐந்து சதமானம் (75%) அதன் எடை குறைவாக இருக்கின்றது. உதாரணமாக, பூமியின் சாக்கில் இரண்டரைபடி—அதாவது ஒரு காலன் (Gallon) எடுத்து நிறுத்தால் அது ஐம்பத்து ஐந்து பவுண்டு எடையிருக்கும். வியாழனில் அதே அளவு (முகத்தலளவையால்) சாக்கை எடுத்து-நிறுத்தல் அளவையிற் கணக்கிட பதினான்கு பவுண்டுதான் அதிக பக்ஷம் இருப்பதாகக் கண்டிருக்கின்றனர்.

'பளுவு'—'கனம்' என்பது கோள்களின் ஈர்க்கும் சக்திதான் என முன்பே அறிந்திருக்கின்றோம். கோள்களின் பரிமாணம் அவற்றின்

திரட்சி, சரக்கின் கனம்-இவற்றினால் ஆற்றல் என்னவென்பதைக் காணக் கூடும். ஆற்றல் அதன் இறுக்கத்தை புலனாக்கும். இவ் வழி ஆராய்ந் தறிந்தவர்கள், பூமியினும் வியாழன் இரண்டரை மடங்குதான் கனமுடைய தென்கின்றனர். அதாவது நூற்று ஐம்பது பவுண்டு கனமுடைய ஒரு மனி தர், வியாழ உலகில் முன்னூற்றுத் தொண்ணூற்று ஆறு பவுண்டு கனமு டையவராக விருப்பாராம். இதன் திரட்சிக்கும் பரிமாணத்திற்கும் ஏற்ப வின்றி இது மிகு வேகமாய்த் தன்னைத்தான் சுற்றிக்கொண் டிருத்தலின், ஒளியோ—வெப்பமோ சூரியனிடமிருந்து பெறக் கூடியதைக்கூட வியாழ உலகம் கிரகிப்பதற்குரியதாக விருக்கவில்லையாம். இதனால், இந்த உலகில் இரவு-பகல் என்னும் வேறுபாடுகள் குறிப்பிடக் கூடியதாக விருக்கவில்லை யென்னும் ஒரு கருத்தை மேலும் தெளிவாக உறுதிப்படுத்துகின்றனர். இதனை ஆகாயக் கூறு (அதாவது சலனமற்ற வாயுவின் நிலை) மிகுந்ததாக நிபுணர்கள் மதிக்கின்றனர்.

இவ் வழி, பொருள் எல்லையின் அப்பால் உணர்வு அலைகள் கடந்த— ஆனால், உணர்வுகளுக்கெல்லாம் மூலமாய்-பொருள் எல்லையின் சீர்த்தி களுக்கு ஒரு ஆதாரவாய்—உள்ளும் புறமுமாய் இலங்கும் வான்-ஆகாயத்தின் கூறு மிகுந்த இந்த வியாழனை தெய்வ எல்லையின் சீர்த்திக் குரியதாய்க் கூறுகின்றனர்.

## சரக்குகள்

வியாழனில் பிருதிவியின் கூறு முப்பத்து ஆறு பங்கும்-அப்புவின் கூறு இருபத்து நான்கு பங்கும்-அக்னியின் கூறு பதினெட்டு பங்கும்-வாயு வின் கூறு இருபத்திரெண்டு பங்கும் ஆக சரக்குகளின் சேர்க்கையைக் கூற லாம். இவ்விதம் ஐம்பூத சேர்க்கையின் வடிவாகத் திகழும் இந்த வியாழ அண்டம் அடர்த்தியான காற்று மண்டலத்தால் சூழப் பெற்றிருக்கின்றது. இதனால் முதல் மூன்றின் நிலைகளும் பெரிதும் ஆகர்ஷிக்கப் பெற்று அதன் மூலம் அவற்றுள் சாதாரணமாக அறுபது சத மானம் வாயுவின் கூறுக்குரிய தாய் விடுகின்றது. அந்த வேகத்தின் அதீதம் சலன ஆதிக்கம் குறைந்த (ஏன், இல்லாத) வானத்தின் நிலையைப் பெற்று விடுகின்றது. இவ் வகை யில் எழுபது முதல் எண்பது பங்கு வாயுவின் தீக்ஷண்யத்து-சலனமற்றதாக ஆய்விடுகிறது.

தன்னைச் சுற்றிக்கொள்ளும் ஒரு சுழல் இருந்தும்-இரவு பகல்களைப் பற்றிய விசேஷமான வேறுபாடுகள் ஏதுமின்றி; எவ்விதத்தும் பாதிக்கப் பெறாம லிருப்பதால், இது தெய்வ எல்லையில் சேர்க்கப் பெறுவதில் ஆச்சர்ய மொன்றுமில்லை. இதன் சரக்குகள் முழுவதும் ஜீவநிலைக் குரியனவாகவே இருக்கின்றன. முன் சத்தும்-பின் சத்தும் மிகுந்த பரிபக்குவங்களுடன் அதி தீக்ஷணம் கொண்டனவாம். அவற்றின் இயக்கமும்-இயலும் இதன் ஆட்சியுள் அடங்குதலின், திருஷ்டி பலம் மிகவும் விசேஷங் கொண்டதாகக் கருதுகின்றனர்.

(தொடரும்.)

# ஏழையின் கண்ணீர்

(மு. ச. மு. உசைன் முனவ்வர் பே, நாகூர்.)

மம்மது ஒரு ஏழைக்கிழவன். அவன் குழிந்த கண்களும் வெண் மயிரும், கந்தையும், அவன் ஏழை என்பதை மக்களுக்கு அறிமுகப்படுத்தின. நாள் தோறும் அவன் என்னிடம் ஐயமேற்க வருவான். ஏதேனும் கொடுப்பேன். கொடாவிட்டாலும், என்னைக் கண்டு உரையாடுவதை மட்டும் அவன் மறக்கவில்லை. அவனுடன் எங்கும் தொடரும் ஒரு கருப்புப்பூனை. மம்மதின் இருண்ட வாழ்க்கையெனும் வானில், திடீரென்று தோன்றிய ஒரு விண்மீன். அப்பூனையே அவன் துணைவன்.

ஒழிந்த நேரங்களில் மம்மதின் குடிசைப்புறம் செல்வேன். சிறு குடிசை-வேய்ந்த கூரை. அவன், மம்மது ஒரு தனிவேந்தன். எப்பொழுதும் அப்பூனையுடன் அவன் கொஞ்சி விளையாடிக் கொண்டிருப்பான். "குழலினிது யாழினிது, என்பர் என் பூனை மியா, மியா கேளாதவர்" என்று மம்மது அப்பொழுதெல்லாம் கூறுவான். தொழிலாளியின் பாடு முதலாளிக்குத் தெரியாது. உடுக்கத் துணியற்று, குடிக்கக் கஞ்சியற்று, பரந்த பாரில் நோக்கமின்றி யலையும் எம்போன்றோர்க்கு, உய்யும் வழி காண்பிக்க முன் வருவார் யார்? உழைப்பை மறந்து சோம்பித் துயிலும் ஒரு செல்வர்குழாம், ஏழை படும்பாடு உணருமோ? நேற்று, பசிக் கொடுமை தாளாது என் பூனை எதிர்த்தவீட்டு மூசா வைத்திருந்த வெண்ணெயில் கொஞ்சம் கவர்ந்து தின்றுவிட்டதாம். அதற்காக அதை கொன்றுவிடுவேன் என்று பயமுறுத்தினான் அவன்" இவ்வாறெல்லாம் என்னிடம் மம்மது, நீண்டநேரம் சொல்லிக் கொண்டிருப்பான். சுடுவெயிலிலும், பெருமழையிலும் தவறாது வந்து என்னைக் கண்டு செல்லும் மம்மது, இரண்டு நாட்களாய் என்னைக் காணவே வரவில்லை. அடுத்தநாள் மாலை, மம்மதின் குடிசைப் பக்கம் சென்றேன். அவன் குடிசையை அடுத்த கொல்லையில் குழி தோண்டிக்கொண் டிருந்தான். அவன் நெற்றியில் வியர்வை முத்துக்கள் தெரிந்தன. என்னை ஏறிட்டு நோக்கினான். வாழ்க்கையின் எல்லா கவலையும் திரண்டு அவன் கண்களில் ஒளிர்ந்தது.

"அடுத்தவீட்டு மூசா நேற்று என் பூனையை, ஒரு கோழிக்குஞ்சை பிடித்ததற்காக கொன்றுவிட்டான். அதை உண்ணக் கூட என் பூனையால் முடியவில்லை. அதோ, என் கந்தையில், என் வாழ்வின் துணைவன், எழாத் துயிலில் ஆழ்ந்தனான், பார்" என்றான்.

இறந்த அப்பூனை கந்தலிலே தூங்கிற்று:—" என்னை மன்னி " என்ற குரலை கேட்டு நாங்கள் வாசல் பக்கம் திரும்பினோம். அடுத்த வீட்டு மூசா, மண்வெட்டி கொண்டு, கொல்லைப்புறம் சென்றான். மெத்தையில் புரண்ட மூசா மண்வெட்டி கொண்டு பூனைக்குக் குழிதோண்டினான்.

உடைந்த ஒரு மம்மதின் நெஞ்சுக்கு அது சாந்தியளிக்குமா?

---

# கலைக்கோயில்

"சமூகத் தொண்டன்"



"உலகத்தைக் கலைவளர் கோயிலாய்க் காண்கின்றான் கலைஞன்!
பாரத நாடு கலைகளுக்குப் பேர் போனதல்லவா?"

சென்ற நூற்றாண்டில் மக்கள் கண்களினின்றும் மறைந்து கிடந்த கலைக்கோயில்கள் பல இந் நூற்றாண்டில் கண்டு பிடிக்கப் பட்டு, மாறாவின்பம் பெருக்குகின்றன. தக்காணத்தில் ஒளிர்ந்து ஓங்கும் அஜந்தா, எல்லோரா குகைகளும், பம்பாய்க்கு அருகிலுள்ள எலிபேண்டா குகைகளும், இராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள சித்தன்னவாசல், சென்னைக்கு அருகிலுள்ள மகாபலிபுரம் குகைக் கோயில்களும், இவைகளில் ஆயிரம்—ஆயிரம் ஆண்டுகளாய் அழியாதொளிரும் கலைத் தெய்வமும் உலகத்துக் கலைஞர் உள்ளங்களை யெல்லாம் கவர்ந்துகொண்டு விட்டன.

இவை சிலவே தெரிந்துள்ளன; இன்னும் தெரியாமல் மறைந்து கிடைப்பன பலப் பலவாக விருக்கலாம். இப்படி மறைந்து கிடைப்பனவைகளில் ஒன்றைத்தான் இப்போது மக்களுக்கு அறிவிக்க விழைகின்றேன்.

சென்ற திங்களில் ஓர் நாள், நண்பரொருவர் என்னைச் சந்தித்து, "தாங்கள் நாளை வல்லம் மலைக்குகையில் நிகழும் விழாவிற்கு வரவேண்டும். அங்குள்ள குகைக் கோயிலின் சிற்பங்கள் கண்கவர் வனப்புடையவை. தாங்கள் அவைகளை எப்போதும் பார்த்திருக்கமாட்டீர்கள்," என்று கூறி யழைத்தார்.

செங்கற்பட்டு ரயில்வே சந்திப்பிலிருந்து ஒரு நல்ல பாதை திருக்கழுக் குன்றத்திற்குச் செல்லுகிறது. செங்கற்பட்டிலிருந்து ஒன்றரைக் கல்தூரம் அப் பாதையோடு சென்றால் அங்கே பாதை யருகே ஒரு குளமும், ஓர் சிறு குன்றும் நமக்குத் தோன்றும். இக் குன்று வல்லம் என்னும் கிராமத்தின் எல்லையில் உள்ளது.

திருவிழா! அதுவும், இயற்கை வனப்பு மிக்க மலையில். "போய்த்தான் வருவோம்" என்று புறப்பட்டேன். மேற்குறித்த வல்லம் குன்றின் அடிவாரத்தை யடைந்தேன். ஆ! என்ன இனிமை. இறைவர் எழுந்தருளி யுள்ள விடத்தில் நாதஸ்வரக் கச்சேரி மிக உற்சாகமாய் நிகழ்ந்து கொண்டிருந்தது. அங்கு பொங்கி யெழும் இசை வெள்ளம் இழிந்து வந்து என் செவிகளுக்கு இன்ப விருந்தாயின.

மலை யேறுவதற்கு நல்ல படிக்கட்டுகளில்லை. குன்றின் உயரம் 300 அடிக்கு மேலிராது. பாதி உயரம் ஏறினேன். அவ்விடத்தில் தான் குகைக் கோயில் உளது. சுமார் நாற்பது அடி உயரம். அதே அகலமுள்ள ஓர் பெரும்பாறை. அப் பெருங்கல் அவ்வழி போந்த கலைஞன் உணர்வை

எழுப்பி யிருத்தல் வேண்டும். அது மட்டுமல்ல. அவ் விடத்தினின்றும் சுற்றுப் புறங்களை நோக்க எம்மருங்கும் கண் கொள்ளாக் காட்சியாய் மிளிர்கின்றது, இயற்கை யெழில். கண்காணும் தூரம் நெருங்கிய மலைக் கூட்டம் உள்ளத்தை அள்ளுகின்றது. இவ் வழகுச் சூழலுக் கிடையில் வெள்ளம் போன்ற கலை யுணர்ச்சியைத் தேக்கி மகிழ வெண்ணினான் போலும், கலைஞன்., அவ்வளவு தான். உடனே சுத்தியையும் உளியையும் கையிலெடுத்துக் கொண்டான். சுமார் இருபது அடி நீளமும் ஆறு அடி அகலமும் வைத்து நான்கு கால்களுடன் ஒரு மண்டபமும், அம் மண்டபத்தை முன்னுக்கி ஒரு "கர்ப்பகிருஹ"மும் தோண்டினான். தோண்டியவன் முழுதையும் தோண்டி கர்ப்ப கிருஹத்தை வெற்றிட மாக்காமல், மூர்த்தியமைக்க வேண்டிய விடத்தில், மூர்த்திக்கென்று ஓர் அளவு கல்லைத் தோண்டாமல் விட்டுப் பின், அதையே அழகிய சிவலிங்க மூர்த்தமாக வடித்து விட்டான்.

இவ்வாறே அக் குகைக் கோயிலில் உள்ள அம்பிகை, முருகன், கணபதியாகிய மூர்த்தங்கள் தனிக் கல்லில் ஆக்காமல் பாறையிலிருந்தே உருவாக்கப்பட்டுள்ளன! சிவலிங்கமூர்த்தம், ஒவ்வொரு பகுதியும் அளவோடமைந்து, காணும் கண்களைக் கவரும் கவினுறு மூர்த்தமாய்க் கலை யொளி வீசுகின்றது.

## பேசுங் கணபதி.

மேற் கூறிய சிவலிங்கத்திற்கு அடுத்தபடியாய்க் கூற விருப்பது கணபதி மூர்த்தமாகும். இப் பிள்ளையார் சிவலிங்கத்திலும் மிக ஜீவ ஒளியுடன் விளங்குவது. இம் மூர்த்தம், குகை கோயில் முன் மண்டபத்திற்குத் தென் பக்கத்தில் வெளிப்பாறையில் குடைந்தெடுக்கப் பட்டுள்ளது. இவ் வுருவம் மிகப் பெரியதாயு மில்லாமல் மிகச் சிறியதாயு மில்லாது நடுத்தரமாயுள்ளது. இது வீற்றிருக்கும் பாவனையில் நான்கு கைகளுடன் அமைக்கப்பட் டுளது. இது நேராய்ப் பாராமல், 24 டிக்கிரி பக்க வாட்டில் திரும்பிப் பார்ப்பது போல் இருக்கிறது. இப்படித் திரும்பி யிருப்பதால், அம் மூர்த்தம் தும்பிக்கையை நீட்டி எதையோ தாவுவது போன்ற பாவம் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. ஆ! தும்பிக்கையை நீட்டிடத் தாவும் அந்தப் பாவத்தில் தான் என்ன வேகம்! எவ்வளவு சுறு சுறுப்பு; சிறுவர் விளையாடுகையில் ஒருவரை யொருவர் தாவிப் பிடித்து விளையாடுவது போல், பிள்ளையாரும் தம்மைக் காண வருவோரைத் தாவிப் பிடிக்க முயலுகின்றார். அந்தச் சிறிய கண்களில் தான் எவ்வளவு ஒளி, எவ்வளவு குறும்பு பிள்ளையாரைப் பார்க்கப்போகும் ஒவ்வொருவருக்கும் பிள்ளையாருடன் கூடி விளையாடலாமா வென்னும் உணர்ச்சி கூட உதிக்கும்.

அவ்வளவு உத்வேகமும், படபடப்பும் ஒரு சிலையில் காண்பது வியப்பினும் வியப்பன்றோ! பூதாகாரமான ஒரு கல்லில், தன் கலை யுணர்வையும், கலாநிதமான தெய்வ வுணர்வையும் கலந்து, இவ்வாறு பேசுங் கணபதியை வடித்து உருவாக்கி விட்டான், கலைஞன்.

இந்தக் கணபதியின் முழங்காலை யாரோ உடைத்து விட்டனர். பாவம் இப்படிச் செய்தவன், இந்தக் கணபதியை பொறுத்த வரையில் கலையுணர்வு அற்றவன் என்று சொல்ல முடியாது. இந்தக் கணபதி, கலை யறியாதவர்க்கும் கலை பயிற்றும் ஆற்றல் உடையவரென்று அவரைக் கண்டவர் எவரும் ஒத்துக் கொள்ளவேண்டும். எனவே, அப் பிள்ளையாரின் படபடப்பையும் விஷமத்தையும் கண்டு மனம் சகியாத வொருவன்தான் கணபதியின் கொட்டத்தை யடக்கவேண்டி, முழங்காலை யுடைத்து விட்டான் போலும். அப்படிச செய்தவன் வெற்றி யடைந்தவனல்ல. ஏன்? கால் உடைந்ததால் கணபதியின் மிடுக்கு அணுவத்தனையும் குன்றிவிடவில்லை.

## அருள் வடிவ அம்பிகை

கணபதியைக் கண்டோம். இனி காண விருப்பது அந்த அழகுக் குன்றான அம்பிகையின் மூர்த்தம். அதோ மண்டபத்தின் இடக் கோடியில் இருக்கின்றது அம் மூர்த்தம். அது சுமார் 5 அடி உயரமிருக்கும். நான்கு கைகளுடன் நின்ற திருக்கோலமாய்க் காட்சி யளிக்கின்றார் தேவியார். ஆ! என்ன அற்புதம்! எப்படித்தான் அவ்வுருவத்தை ஆக்கினானோ, அந்தக் கலை வல்லான் என்று நமக்குப் பிரமை தட்டுகிறது. தேவியின் உருவம் பகுதியாம் கலைக்கடலில் நம் மனம் அப்படியே அழுந்தி மாண்டு விடுகிறது. இந்நிலையில் கலைவளர்ந்த தேவியின் மூர்த்தத்தைப்பற்றிக் கருத்தொன்றும் கூற முடியாது உணர் விழந்து விடுகிறோம். நாம் கோயிலின் முன் நிற்கிறோம் என்னும் நினைவு அழிந்து போய், உலகெலாம் ஈன்ற அருட்தாயே! நம்முன் வந்து காட்சி வழங்குவதாக நம்புகிறோம். அவ்வளவு அமைதியும், இன்பவுணர்வும் நமது உடம்பில், உள்ளத்தில், உயிரில் பாய்ந்து என்னவோ செய்கிறது.

தேவியின் நீள்வட்ட முகமே ஓர் தனி அமைப்பு. அந்த அருள் ததும்பும் முகத்தில் வாழும் கண்களின் அழகுதான் என்ன! கண்களுக்கான தனியியல்பெல்லாம் எப்படி அக் கண்களில் சிறப்பாய் அமைந்தனவோ! கண்கள் சிறப்பாய் உள்ளத்து உறையும் உணர்ச்சிகளை யெல்லாம் அளந்து காட்டும் இயல்பினவென்று நாமறிவோம். ஆனால், கல்லினால் ஆன அம்பிகையின் உருவத்தில் கருணை எப்படித்தான் நிறைந்திருக்கும்? ஆனால், நிறைந்திருப்பதாகவே அருளைப் பொழிகின்ற அம்பிகையின் கண்கள் காட்டுகின்றன. கல்லால் ஆன சிலை மறைந்து, கருணைத் தெய்வமே காட்சி யளிக்கின்றாள்!

ஆ! என்னே! அந்தக் கல்லுளி மன்னனின் கைத்திறம்? வெறும் கல்லுளியும், கைத்திறனுமோ தெய்வக்காட்சி யளிக்கும்?

கலைஞன் அல்லவா அளிக்க முடியும்? கலைஞன் என்றால் யாவன்? கலைஞன் கலையுணர்வும், மகத்தான கற்பனைத்திறமும் அமைந்தவனாய், அருளும் வாய்ந்திருத்தல் வேண்டும். அருள் உள்ளத்தினின்று பொங்கி யெழும் அருளுணர்ச்சியின் தேக்கமே தான் திரண்டு அம்பிகை வடிவாய்க் காட்சி யளிக்கின்றது. கலைஞன், தன் உணர்ச்சிப் பெருக்கைக் கற்சிலையிற் பெய்து, அதை உயிருடைய தாக்கி விட்டிருக்கிறான். அம்பிகையின் மூர்த்தம் கற்சிலைதானே யென்று அதன்பின் மௌனமாய் நின்றாலும், அம் மூர்த்

தம் நம்மைச் சும்மா விடுவதில்லை; பேசும்படி தூண்டுகிறது. நாம் தேவி யின் முன் பேசாமற் பேசுகின்றோம்! எவர் எது கோரி நிற்பினும் அவர்க்கு, அதை யளிப்பதுபோல் அந்த அம்பிகை மூர்த்தம் கண்ணொளி செய்கின்றது.

இவ்விதம், சடப்பொருள்களை யெல்லாம் உயிர் ததும்பும் சித்துப் பொருளாக்குவதில் கலைஞன் படைப்புக் கடவுளுடன் போட்டி யிடுகின்றான். கலைஞன் கடவுள் நெறி கண்டவன் என்பதை நாம் எவ்வளவு கண்கூடாக இந்தக் கலைக்கோயிலில் காண்கின்றோம்!

இந்தக் குகைக்கோயிலில் எழுந்தருளியுள்ள சுவாமிக்கு வேதாந்த ஈசுவரர் என்றும், அம்பிகைக்கு ஞானம்பிகை என்றும் பெயர்.

இக் கோயிலுக்கு ஒரே கால பூசைதான். தரிசனம் செய்ய வருவோர் செங்கல்பட்டு ரயிலடிக்கு அருகில் உள்ள ஏகாம்பரநாத தேவஸ்தான குருக்களிடம் திறவுகோல் பெறலாம். அல்லது அவரையே குகைக் கோயிலுக்கு வந்து தரிசனம் செய்து வைக்கும்படி கேட்டுக்கொள்ளலாம்.

## வல்லம் கிராமம்

வல்லம் இப்போது ஓர் சாதாரண கிராமம். ஆனால் 16 ஆம் நூற்றாண்டு வரை செழுமையாய்ப், பல பெருங்குடி மக்களைத் தன்பால் உடைத்தா யிருந்தது. அப்போது அவ்வூரிலிருந்த பெருங்கொடையாளி யான காளத்தியப்ப முதலியார், பல புலவர்களையும் ஆதரித்து வந்தார் என்றும், சமயாசிரியர்களில் ஒருவரான அப்பர் சுவாமிகளும் இவ்வூருக்கு வந்ததாயும் ஒரு வரலாறு கூறுகின்றது.

தொண்டைநாட்டுச் சிவத்தலங்கள் முப்பத்திரண்டினுள் ஒன்றானதும், ஆளுடையப் பிள்ளையாரால் பாடப் பெற்றதுமான திருஇடைச்சுரம் என்னும் தலம் வல்லத்திலிருந்து மூன்றுமைல் தூரத்தில் உளது.



# வள்ளியம்மையின் அதிர்ஷ்டம்

(ஜி. அழகிரிசாமி.)

ஜில்லாப்படத்தில் இடம் பெறத் தகுதியற்ற சிறு கிராமம் மணலூர். திருநெல்வேலி ஜில்லாவில், இருக்கிற இடம் தெரியாமல் சங்கரன்கோவில் ஸ்டேஷனுக்கு அரைமைல் தூரத்தில், நாகரிக வாழ்க்கைக்கு அநேக மைல்களுக்கு அப்பால் தன் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தது. ஒன்றிரண்டு சிறுகுளங்களில் பெருகிய தண்ணீரால் அவ்வூரார் கொஞ்சம் நன்செய் சாகுபடி செய்து பிழைக்கிறார்கள். எதாவது ஒரு வருஷம் மழை கொஞ்சம் மட்டு என்றால் அதனால் ஏற்படும் கஷ்டத்தின் எதிரொலி மணலூரில்தான் கேட்கும்.

அன்று வெய்யில் மிகக் கடுமையாக அடித்துக் கொண்டிருந்தது. அது தைமாதம் ஆனதால், வயல்களில் அறுவடை யெல்லாம் முடிந்திருந்தது. அதனால் எல்லோரும் வீட்டைக் காத்துக்கொண்டிருந்தனர். வள்ளியம்மையின் வீட்டில் அவளோடு இரண்டு அயல்வீட்டுப் பெண்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப் பெண்கள் என்னவோ சாதாரணமாக ஒரு சிந்தனையுமற்றுப் பேசிக்கொண் டிருந்தார்கள். ஆனால் வள்ளியம்மை உள்ளத்தில் அவர்கள் பேசும் ஒவ்வொரு சொல்லும் திகில், அதற்கு ஆறுதல், மறுபடியும் திகில்............இப்படி பலவித உணர்ச்சிகளைச் சிருஷ்டித்துக் கொண்டிருந்தன.

"சொர்ணம், ஒம் புருஷன் சங்கரன் கோயிலுக்குப் போனானே, எப்ப வந்தான்?" என்று கேட்டாள் வள்ளியம்மை.

"இண்ணைக்கிக் காலம்பரத்தான் வந்திருக்காரு. பாட்டி, கேட்டியா! பெனாங்கிலே அப்படிச் சாகுதாகளாம் குண்டுலே, பாவிமக்க."

"இது உனக்கெப்படித் தெரியும், சொர்ணம்?"

"அவருதான் சொன்னாரு. சங்கரன் கோயிலிலே பேசிக்கிடறாகளா மில்லா?

"எப்படி?" என்று கேட்டாள் பக்கத்திலிருந்தவள்.

"இன்னும் எப்படி? அப்பவே சொல்லல்லே? நிறையப் பேருதான் சாகுதாகளாமே?" என்று நீட்டினாள் சொர்ணம்.

"பெனாங்குக்கும் ரெங்கோனுக்கும் எத்தனை கல்லு இருக்கும்?" என்று கேட்டாள் வள்ளியம்மை.

"நம்ம என்ன, போய் பார்க்கவா செஞ்சிருக்கோம்? அங்கேயும் குண்டு வருதன்னு சொல்லிக் கிட்டாகளாம். அதனாலேதான் இப்போ அங்கிருந்து அரிசி, சாமான் வரத்தும் இல்லேயாம்."

"அப்படியா? ரெங்கோனுக்குமா? என்னமோ, இதெல்லாம் உலகத்துக்கு ஆகாத காலம்" என்றாள் வள்ளியம்மை.

அப்பொழுது "உள்ளே யார் இருக்கிறது?" என்று வாசலிலிருந்தபடியே ஒருவர் கேட்டார். அதற்குள்ளாக ஒரு பையன் வீட்டுக்குள் வந்து யாரோ ஒருவர் வந்திருப்பதாகத் தெரிவித்தான். எல்லோரும் எழுந்து வாசலுக்கு வந்தார்கள்.

"வாங்கய்யா, இந்தத் திண்ணையிலே உட்காருங்க. வெயிலு ரொம்ப சாஸ்தியா யிருக்கும்" என்றாள் வள்ளியம்மை.

"ஆமம்மா, வெயில்னு அகாத வெயில்" என்று சொல்லிக்கொண்டே குடையை மடக்கி பக்கத்தில் வைத்துக்கொண்டு திண்ணையில் உட்கார்ந்தார் சங்கரன்கோவில் போஸ்ட் மேன்.

"கொஞ்சம் மோர் கொண்டுவரச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

"இல்லையில்லை, வேண்டாம். கணக்கப்பிள்ளை வீட்டிலே சாப்பிட்டுப் போட்டுத்தான் வாரேன்" என்று சொன்னார்.

போஸ்ட்மேன் "ரங்கூனிலிருந்து இருபது ரூபாக்கு மணியார்டர் வந்திருக்கு" என்று சொல்லிக்கொண்டே மணியார்டர் பாரத்தை வள்ளியம்மை கையில் கொடுத்தார். கொஞ்ச நேரத்தில் அவளுடைய இடது கைப் பெருவிரலின் ரேகை புரட்டப்பட்டு கணக்கப்பிள்ளையிட மிருந்து சாக்ஷி கையெழுத்தும் வாங்கப்பட்டது. வள்ளியம்மை பணத்தைப் பெற்றுக் கொண்டாள்.

"சரி, அம்மா, வரட்டுமா?" என்று எழுந்தார் போஸ்ட்மேன்.

"சரி, இந்தாங்க இண்ணைக்கு இவ்வளவுதான்" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது வள்ளியம்மையின் வலக்கை ஒரு நாலணா நாணயத்தை போஸ்ட்மேன் கையில் கொடுத்தது.

அதைப் பெற்றுக்கொண்டு அவரும் புறப்பட்டார்.

"ஆமய்யா, இந்தக் கிழிச்சக் குடுத்த தாளிலே என்ன எழுதியிருக்கு?" என்று வள்ளியம்மை கேட்டாள்.

"தங்கம் சௌக்கியமாய் இருக்கிறாளாம். நாலைந்து நாட்களிலே நீங்கள் காகிதம் எழுத வேண்டுமாம், அவ்வளவுதான்" என்று சொல்லிவிட்டு போய்விட்டார்.

"தங்கத்துக்கு இது வரைக்கும் என்ன செய்ஞ்சது?" என்று கேட்டாள் சொர்ணம்.

"இப்போ அவளுக்கு வயித்திலே எட்டுமாசம். இதுதான் தலைக் குழந்தை கர்ப்பம் இன்னுட்டு அவன் சுகத்துக்கு காயிதம் எழுதன்னு சொன்னேன். அதுதான் மருமகன் எழுதி யிருக்கிறான்......சரிதானே, ஏதாவது குண்டு கிண்டுன்னு இருந்தால் மருமகன் காயிதம் எழுதாமல் இருப்பானா?" என்று கூட நின்ற பெண்ணைக் கேட்டாள் வள்ளியம்மை.

"ஆமா, இவன் சொன்னான்னு கேக்கிறீகளே" என்று சொல்லும்போதே சொர்ணம் இடை மறுத்து,

"ஆமாம்மா, எனக்கு இதுதான் வேலை. எதைச் செய்வோம், என்னத்தைச் சொல்வோம் இன்னுட்டு" என்று "வெடு"க்கென்று கூறினான்.

* * * *

வள்ளியம்மைக்கு வயது ஐம்பது ஆகிறது. அவளுடைய புருஷன் இறந்து பதினைந்து வருஷங்கள் ஓடிவிட்டன. இப்பொழுது மணலூரில் அவள் ஒரு "பெரிய" மனுஷி. பொதுவாகவே கிழவி, விதவையாக யிருந்

தால் பெரிய மனுஷியா யிருக்க வேண்டுமென்பது ஒரு நியதி! அவளுக்கு வெகு சுருக்கமாகத்தான் நன்செய் இருந்தது. அதை வைத்துக்கொண்டு தன் ஒரே பிள்ளையாகிய தங்கத்தை நன்றாக வளர்த்தாள். தங்கத்திற்கு முன்னுல் பிறந்த இரண்டு ஆண் குழந்தைகளும் சிறு வயதிலேயே இறந்து போய் விட்டார்கள்.

தங்கத்திற்கும் வயது வந்தது. அந்த ஊரிலேயே ஒரு சாதாரண குடும்பத்தில் அவளைக் கல்யாணம் செய்து கொடுக்கத் தீர்மானம் ஆயிற்று. பெருமாள் கோனார் மகன் கிருஷ்ணனுக்கும் தங்கத்துக்கும் கல்யாணமாகி நான்கு வருஷங்களும் ஆய்விட்டன. பெருமாள் கோனார் கொஞ்ச நாட்களில் இறந்துபோய் விட்டதால், கிருஷ்ணன் தன் மாமியார் வீட்டுக்கே வந்து வசிக்கத் தொடங்கினான்.

மூன்று வருஷங்களுக்கு முன் ஒருநாள் இரவு எட்டுமணி யிருக்கும், நிலா வெளிச்சத்தில் வள்ளியம்மை வீட்டு முற்றத்தில் அவள், கிருஷ்ணன், தங்கம் ஆகிய மூன்றுபேரும் பல பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அந்தந்தக் காலத்துக் காட்டுவேலைகளைப்பற்றி இரவு நேரங்களில் கிராமாந்தரங்களில் பேசிக்கொண்டிருப்பது வழக்கம். அந்த வருஷம் மழை சரிவரப் பெய்யவில்லை. நன்செய்களும் கைவிரித்து விட்டன. அதனால் குடும்பக் கஷ்டங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். கடைசியாக உறுதியோடு கீழ்க்கண்ட வார்த்தைகளைக் கிருஷ்ணன் சொன்னான்.

“என்னதான் சொல்லுங்கோ, கொளும்பு—ரெங்கோனுன்னு புறப் படாட்டா நம்ம பஞ்சம் தீரப் போறதில்லே. இந்த மணலூருக்குள்ளேயே மண்டிக்கிட்டுக் கிடந்தா, கிடந்து சாக வேண்டியதுதான்.”

அன்று சொன்னபடியே கிருஷ்ணன் சிறிது நாட்களில் ரங்கூனுக்கு ஒரு வகையாகப் போய்விட்டான். பிறகு கொஞ்ச தினங்களுக் கப்புறம் வந்து தன் மனைவியையும் அங்கே அழைத்துக்கொண்டு போனான். வள்ளியம்மைக்கு நல்லகாலம் பிறந்தது. கிராமவாசிகளிடையே ஒருவித எண்ணமுண்டு. வெளியூர்களுக்கு,—அதிலும் ரங்கூன் முதலிய தூர நகரங்களுக்குச் சென்று எவ்வளவு மோசமான தொழில் செய்து பணம் சம்பாதித்து அனுப்பினாலும், அவர்கள் மீது கொஞ்சம் மதிப்பு.

வள்ளியம்மையும் கொஞ்சம் கொஞ்சமாய் நன்செய்களை வாங்க ஆரம்பித்தாள்; கையிலும் பணம் கொஞ்சம் சேர்ந்தது. நன்செய்களைக் கவனிக்க இரண்டு வேலைக்காரர்கள். இப்பொழுது வள்ளியம்மையின் அதிர்ஷ்டத்தைப்பற்றி ஊரில் பேசாதவர்கள் கிடையாது. “ஆங்காலம் * மெய்வருந்த வேண்டாம்” போங்காலம் வீட்டை மூடவேண்டாம்” என்று வள்ளியம்மை பேச்சு வரும்போதெல்லாம் சொல்லிக்கொள்ளுவார்கள். அவளுக்கும் மனதுக்குள் தன் மருமகன் சம்பாத்தியத்தைக் கண்டு கொஞ்சம் மதிப்பும் பெருமையும் உண்டு.

இப்பொழுது ரங்கூன் எல்லை வரைக்கும் யுத்தத்தின் காரணமாக குண்டு வீச்சு பரவி விட்டதால், அவளுடைய மனம் சோர்ந்தது. ஊரில் பல

---

* ஆங்காலம்—ஆகும் காலம்; போங்காலம்—போகும் காலம்.

பேச்சுக்கள் உலாவும். அவை யெல்லாம் ஒரு பயங்கர வடிவெடுத்து வள்ளி யம்மை கண்களுக்குத் தோற்றும். இருந்தாலும் அவளுக்குத் தன்னுடைய கிருஷ்ணபக்தி வீண் போகாது என்ற நம்பிக்கை!

"இனிமேல் புறப்பட்டு வரணும்னு வர முடியாதா?" என்று இரண்டொருவரிடம் கேட்டாள்.

அந்தக் கிராமத்து ஜனங்கள், "அதுதான் கப்பல் போக்கு வரத்து நின்னுபோச்சாமே" என்று சொல்லி விட்டார்கள்.

அவளுடைய மனம் மிகவும் துயருற்றது.

* * * *

மறுபடியும் பத்துப் பதினைந்து நாட்கள் கழிந்து அந்தப் போஸ்ட்மேன் வந்தார். வள்ளியம்மைக்கு ரங்கூனிலிருந்து கடிதம் வந்திருந்தது. அதை அவரை வாசிக்கச் சொன்னாள்.

"இங்கே சண்டை வந்து விட்டதால் தங்கத்தை இரண்டொரு நாளில் ஊருக்கு அனுப்பி வைக்கிறேன். முடிந்தால் நானும் வருவேன். வாலிபர்கள் எல்லாம் திடீரென்று புறப்பட்டுப் போய் விட முடியாது என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால் இங்கே ஒருவித ஆபத்தும் இல்லை. அநேகமாக ஊருக்கு வந்து விடுவேன்" என்ற விஷயத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டாள்.

அன்று முதல் அவள் மனம் ஒரு நிலை கொள்ள வில்லை. "கிருஷ்ணன் வராவிட்டால் என்ன செய்வது? என் ஒரு பிள்ளையை, கல்யாணம் செய்து வைத்தபின் ஏதோ கடவுள் கொடுத்த இந்த நல்ல நிலைமையில் பார்க்கக் கூடாதா? தங்கம் எப்படித் தனிமையாகக் கடல் கடந்து வந்து சேர்வாள்?" என்றெல்லாம் அவள் மனம் கற்பனை பண்ணும். அந்தக் கற்பனை முடியும்போது அவள் மனதில் ஒரு சோகக்கனலை மூட்டிவிடும். அவள் முகத்திலும் அருள் கெட்டு விட்டது. நாளுக்கு நாளாக மெலிந்து இளைத்தாள். வயோதிகத்தோடு துக்கமும் சேர்ந்தால் வேறு என்ன ஆகும்? அவள் தினந்தோறும் வேண்டாத தெய்வங்கள் கிடையாது. அவளுக்கு எப்படியோ தன் மருமகன் வரமாட்டான் என்ற எண்ணம் பட்டுவிட்டது. அவள் நினைத்து எதிர்பார்த்த எதிர்கால வாழ்க்கைக்கும் அவளுடைய தற்போதைய மனோநிலைக்கும் எவ்வளவு வேற்றுமை! நன்செய்-வீடு-வாசல் என்ற சொத்து சுகங்களின் நடுவில் சந்தோஷமாக வாழும் தன் மகளுடைய வாழ்க்கையை எதிர்பார்த்த அவள் மனம் எப்படி எப்படியோ நினைத்து விட்டது! யார் என்ன சொல்லியும் அவள் மனத்துயரம் தீரவில்லை. காலம், நாள் நாளாகக் கழிந்து கொண்டிருந்தது. அவளுடைய அதிர்ஷ்டம்.....................

* * * *

ஒருநாள் காலை வீட்டினுள்ளே பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள் அந்த வள்ளியம்மை! "தன் மனைவிக்குப் பிரசவ காலமா யிருக்கிறதென்று சொல்லிக் கேட்டுக்கொண்டால் அவளுக்குத் துணையாகப் போகவாவது அவனை அனுமதிக்க மாட்டார்களா?" என்ற எண்ணம், பாத்திரம் தேய்க்கும் அவள் கையின் அசைவைப்போல் அவள் மனத்தை

# மஹாரிஷி சேய்கள்

(எம். எஸ். ஆதிமூலன்)



அகவல்

பூவுல கதனிற் புகழ்பெறு மிந்துக்
களாவர் மற்றையோ ராகிய பற்பல
தேசத் தவர்களுஞ் சிர்பெறு வருட
நேசப் பெயரது நியமன மறிகிலோம்
ஆங்கில வருட மறிவது கிறஸ்து
பாங்குள ஜெனனம் பகர்ந்திடு முறையால்
ஆயிரத் தொளாயிர மாறே ழாண்டென
நேயமா யுலகில் நிகழ்வன வாகும்;
மஹமது(ஸல்)மக் காவி லிருந்து
புகழொடு மதினா போனவத் தினமுதல்
ஆயிரத்து முந்நூற் றறுபத் தொன்றென
தூயதாய்ஹிசரி துலங்கலா லொவ்வோர்
சம்பவ காலந் தானே யாதியாய்
நம்பியே இன்றும் நடத்தையி லுளதே!
நமது முன்னோர்கள் நலம்பெற வழங்கிய
சமயநல் லாண்டிற் றனியொரு பெருமை
உண்டென யாமு முணர்கிறோ மஃதினைக்
கண்டது சரித்திர காலத்தின் முன்னும்
சராசரப் பிரபஞ் சங்களுஞ் சகமும்
வருஷா யனருது மாதபட் சாதியும்
காலசொ ரூபியாங் காருண்யக் கடவுள்
சீலமுடனே சிருஷ்டித் தாரெனவும்
சரித்திர மாங்கு சாற்றுதாம் மற்றும்
பிரித்துள வருடப் பெயர்க் காரணத்தை
ஏடுகி மிவ்வாண் டிறுதியும் பின்பு
பாகெனச் சித்திர பானுவா ரம்பமும்

---

அசைத்துக்கொண் டிருந்தது. அப்பொழுது அடுத்த வீட்டுப்பையன் ஒருவன் இவளிடம் வந்து, "பாட்டி, ஊரிலிருந்து மாமாவும் அக்காளும் வாராஹ?" என்றான்.

"யாரு ? மாமாவுமா ? கிருஷ்ணனும் வாரானு ?"

"ஆமா ! வந்து பாரு."

"தெய்வமே! நான் உன்னைக் கும்பிட்டது வீண் போகல்லே. இது தான் எனக்கு அதிர்ஷ்டம்" என்று சொல்லிக்கொண்டே வீட்டு வாசலுக்கு வந்தாள்.

ஆதலால் யாமிதை யறிந்தவா றிங்ஙனம்
போதினி வாயிலாய்ப் புகல்வது நன்மையே
அகிலாண்ட கோடியீர் மாண்ட நாயகனும்
அனாத ரக்ஷகன் ஆபத் பாந்தவன்
செப்புதற் கரிய ஸ்ரீமந்நா ராயணன்
ஒப்புயர் வற்ற உத்தமர் தன்னிடம்
நாரத மஹரிஷி நண்ணியே "உலகெலாம்
ஏற்புறு மாறுயையோ தேவரீ ருடையதே!
அவ்வித மாயையை அடியே னறிந்திட
எவ்வித மாயினு மெனக்கருள் செய்குவீர்"
என்றவர் வேண்டிட இகபர நாயகன்
மன்றுள்கின் ருடிய மன்னவன் மைத்துனன்
புன்னகை தவழப் போதித்த தென்னவெனில்,
"என்னருள் மாயையை இந்திராதி தேவரும்
அறிவதற் கரிதா மாயினு மஃதைநீ
தெரியவ வாவுறில் சிறந்தஇவ் வாவியில்
மூழ்கிவா" வென்று மொழிந்தனன் விண்டு;
மூழ்கிய மஹரிஷி முன்னுருக் காண்கிலோம்.
பாரினிற் பெண்ணுரு பாங்கா யமைந்தனர்
பூருவக் கியானமும் பூராத் துறந்தனர்
அணங்கைக் கண்ட அவ்வன வேடுவன்
மயங்கவே மாரன் மலர்க்கணை ஏவினன்
காதலால் வேடுவன் காந்தர்வ விவாஹமாய்
நீதிலா மாதெனச் சேர்ந்து சுகித்தனன்
சதிபதி இவர்களின் சல்லாப லாபமாய்ப்
பதியினி லறுபது பாலரை யீன்றனர்
வாவியில் மூழ்கிய மாமுனி இல்லற
வாவியி லமிழ்ந்தியே வருந்தினர் பாபமே
ஹரிபரந் தாமனீ தறிந்தன ரொருங்கே
அறுபது மக்களின் ஆவியை நீத்தனர்
சேயர்கள் மறைவால் சேயிழை உருகியே
ஆயாசத் தோடும் அரும்பசி யாலும்
மேனியும் வாடி மெலிந்தனள் மாது
கானி லலைந்து கடுவழி நடந்து
மாதரு வொன்றிலோர் மாங்கனி கண்டனள்.
ஆதலாற் கனியும் அண்மித் திருந்ததால்
எட்டியே பறிக்க இவள்கரம் நீண்டன
கிட்டிடா தக்கனி கிளம்பிமேற் சென்றன
இத்தரு ணத்தினில் இவள்பசி வேகமும்
சித்தசஞ் சலத்தையுஞ் செப்புவ தெவ்விதம்!

திருமகள் மருவிடு சேஷ சயனனும்
அரிவையின் பக்கலில் அந்தணக் கிழவனாய்
காணவே நின்று "இக் கனியைநீ யடைந்திட
தோணுமோ ருபாயஞ் சொல்வ தியாதெனில்
நதியிதி லிறங்கி நாரியுன் னிடக்கை
நனைந்திடா விதமாய்ஸ் நானம்நீ செய்து
இங்குறி லக்கனி எளிதினிற் கிடைக்கும்'
என்றவ ரியம்பியே எங்கோ மறைந்தனர்
நீரிலம் மடந்தையவ் வாறுமே செய்தனள்
மாறிய முன்னுரு நேரிலே வந்தன
திரிலோக சஞ்சாரி சீரிடக் கையினில்
அரிவையர் வளையது மழகுமோ திரமதைக்
கண்டுவெ குண்டனர் கரியமா லாகிய
விண்டுவை வேண்டினர் வீணையி னன்பனார்
அமரர்கள் வல்வினை யகற்றிய வச்சுதன்,
எமதருள் மாயையீ தாமெனக் காணுமின்
கணவனாய் வேடனைக் காதலித் ததனால்
குணமொடு அறுபது குழந்தையை ஈன்றனை
மக்களி னவியும் மறலிபாற் சென்றன
இக்கண முனதுஞா னக்கண ணேக்குமின்
இவ்வா றுரைத்தலு மவ்வா றறிந்தனர்
இவ்விதி எண்ணியே ஏங்கினர் வெட்கினர்
பக்தவச் சலனைப் பணிந்துமே கெஞ்சி
புத்திரர் நற்கெதி புகும்படி வேண்டினர்
அண்டிய பக்தருக் கருள்செயு மேலவன்
விண்டுவு மாங்கனம் விள்ளுவா ரன்பொடு,
"அறிவுள ஞானியுன் னகத்துள கவலையை
அறவே யொழியுமுன் அறுபது சேய்களில்
பிரபவ ஆதியாய்ப் பெயரது தனித்தனி
அறுபது மிட்டுளோம் அக்ஷய வந்தமாம்
பூதலந் தன்னிலே புகழுவெக் காலமும்
நீதமா யிப்பெயர் நிகழ்ந்திடு மென்றனர்
திருவுறை மார்பனார் செப்பிய நாமமே
வருஷமா யாமும் வழங்கிறே மென்பதாம்
இப்பெருஞ் சிறப்பை எய்திய வாண்டின்
உற்பவம் மிகவும் உயர்வு நானாகும்
அத்தினந் தனிலே அரிதிரு மருகனை
முத்தியை நல்கிடும் மூஷிக வாகனை
சித்திர பானுவிற் சித்திரைத் திங்களில்
சித்தி விநாயகர் சித்தியுந் தந்திட
சதங்கைகள் கொஞ்சுந் தாளிணை யாவரும்
இதம்பெற வணங்குவோம் இன்னல்க ளேகிடும்
சர்வ விக்கினமுந் தானே யகற்றுவர்
சர்வ நன்மையுந் தானீந் தருளுவர்
ஞானந் தருவார் நற்கலை தருவார்
ஆனந்த னுக்கவ ரன்புந் தருவார்
வாழ்க வைங்கரன் வாழ்க வையகம்
வாழ்க நற்றமிழ்; வாழ்க வாழ்கவே!

# ஜேம்ஸ் க்ளார்க் மாக்ஸ்வெல்

(டி. பி. நவநீதகிருஷ்ணன் எம். ஏ., அண்ணாமலை சர்வகலாசாலை.)

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய விதியியல் பூத விஞ்ஞானி (Theoretical Physicist)களில் தலையானவர் மாக்ஸ்வெலே என எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். இவரைப்பற்றி இந்நூற்றாண்டில் பூத விஞ்ஞானத்துறையில் முதலணியிலுள்ளவரான மாக்ஸ் ப்ளாங் (Max Planck) கூறுவதாவது:—

"மாக்ஸ்வெல் பிறப்பினால் எடின்பரோ (Edinburgh)வுக்கும், தன்மையினால் கேம்ப்ரிட்ஜு (Cambridge)க்கும், ஆற்றலினால் உலகிற்கும் உரித்தானவர்."

இவர் சமயப் பற்றுள்ளவரா யிருந்தார்; சமூகத் தொண்டிலும் மிகவும் ஈடுபட்டனர். கேம்ப்ரிட்ஜ், லண்டன் நகரங்களில் இவர் இருந்தகாலத்து, அந் நகரங்களி லிருந்த தொழிலாளிகளுக்கு, அவர்களுக்குப் புலப்படும் வண்ணம், பல விரிவுரைகள் விஞ்ஞானத்தைப்பற்றி நிகழ்த்தியதுண்டு. தான் எடுத்துரைத்த விஞ்ஞானியக் கருத்துக்களை, பல்கலைக் கழக மாணவரைவிட தொழிலாளிகளே ஆர்வத்துடன் கேட்டுணர்ந்தனர் என்று இவர் கூறி யுள்ளார்.

மாக்ஸ்வெல் எல்லோரையும் கவரும் நகைச்சுவையைப் பெற்றிருந்தனர்; ஆடம்பரத்தை வெறுத்தவர். பெரும் பொருளீட்டி, ஆடம்பர வாழ்க்கை நடத்திவந்த வணிகரையே உயர் மக்களென், அக் காலத்தினர் எல்லோரும் (கல்விபெற்ற மக்களுட்பட), கருதி வந்தனர். ஆதலின் விளம்பரத்தை விரும்பாத மாக்ஸ்வெலின் பெருமையை அக்காலத்தே யறிந்தவர் வெகு சிலரே யாவர்.

இவர் எடின்பரோ நகரில் 1831-ம் ஆண்டு, ஜூன் 15-ம் நாள் பிறந்தனர். இவர் ஸ்காட்லண்டு (Scotland) நாட்டில் பெயர்பெற்ற பெருநிலக்கிழவர் மரபில் தோன்றியவர் ஆவார். இவரது முன்னோர்களில் பலர், சட்டம்-அரசியல்-விஞ்ஞானம்-இலக்கியம் இன்னோரன்ன பல துறைகளிலும் திறமை வாய்ந்து விளங்கியவர் ஆவார். இவர் தந்தையாரான ஜான்மாக்ஸ்வெல் (John Maxwell), எடின்பரோ நகருக்கண்மையிலுள்ள மிடில் பீ (Middle bie) என்ற சிற்றூரில் வசித்து வந்தார். அவர் தம் வீட்டிற்கு 'க்ளன்லேயர்' (Glenlair) என்று பெயரிட்டிருந்தனர்.

ஜேம்ஸ் மாக்ஸ்வெல், மூன்றாவது ஆண்டிலேயே, தம்முடைய ஆராயும் இயல்பை வெளிப்படுத்தலானார். "அது என்ன?", "அது ஏன் அப்படிச் செய்கின்றது?" என்று தான் கண்டவற்றைப்பற்றி யெல்லாம் வினவினர். இளைஞராயிருந்த காலத்து, தன் வீட்டினெதிரிலுள்ள புற்றரை மீது படுத்துக்கொண்டு, கதிரவனைக் கண்டு வியப்புற்றனராம்.

ஜேம்ஸ் தம் எட்டாவது ஆண்டில், தம் அன்னையாரை யிழந்தனர். அதன்பின் இவர் தந்தையே இவருக்குத் தாயாயுமிருந்து போற்றி வந்தனர். நல்லறிவு படைத்த தம் தந்தையாருடன் ஜேம்ஸ் க்ளன்லேயூரில் இன்ப

மாகவே வாழ்ந்து வந்தனர். நாட்டுப்புற வாழ்க்கையை இவர் மிகவும் விரும்பினார். தம் வீட்டினருகிலுள்ள நீரூற்றில் நீந்தி விளையாடுவதையும், உளம் சென்ற வழி திரிதலையும் இவர் மிகவும் நாடினார். தன் தந்தையின் பணியாளரின் மக்களுடன் இவர் விளையாடுவதும் உண்டு.

இவர் தாய் நோயுற்றிருந்த காலத்தும், அவர் இறந்த பின்னரும் கூட ஜேம்ஸ் தம் வீட்டிலேயே, ஒரு ஆசிரியரிடம் பாடம் கற்று வந்தார். இவ்வாசிரியர் ஜேம்ஸ் மந்தபுத்தி யுள்ளவன் என்று தந்தையாரிடம் கூறினாராம். ஆயினும் தன் மகன் பாடங்களைச் செவ்வனே கற்காததற்கு அவ்வாசிரியரின் கடுமையே காரணம் என தந்தையார் அறிந்தார். அவ்வாசிரியர் ஜேம்ஸை தலையில் அடித்தும், காதைக் கிள்ளியும் துன்புறுத்தி வந்ததை அறிந்தார். ஆதலின் அவர் அவ்வாசிரியரிடம் ஜேம்ஸ் படிப்பதை நிறுத்தி விட்டார். பின், தன் மகனை, எடின்பரோவிலுள்ள கல்விக் கழகத்திற்கு அனுப்பினார். அந்நகரம் தன்னூரினின்று சற்று தொலைவா யிருந்ததால், ஜேம்ஸ் எடின்பரோவிலேயுள்ள தன் அத்தையின் வீட்டிலிருந்து வரலாயினர். விடுமுறை நாட்களை க்ளென்லேயரில் கழித்து வந்தார். அப் பள்ளிக்குச் செல்லும்போது, ஜேம்ஸ் தரித்துச் சென்ற உடைகள் மற்ற சிறுவர் தரித்தவற்றினின்று வேறு வகையா யிருந்தமை கண்டு, அவர் ஜேம்ஸை எளனஞ் செய்யலாயினர்; 'பித்தன்' என்று இவருக்குப் பெயரிட்டனர். இவற்றை யெல்லாம் ஜேம்ஸ் பொருட்படுத்தவே யில்லை. இவருடைய பள்ளி வாழ்க்கை முழுதும் இவ்விடு பெயராலாயே மற்ற மாணவர்களால் இவர் அழைக்கப்பட்டு வந்தனர். இவருடைய விந்தையான பேச்சையும் சிரிப்பையும், இவர் மடமையின் அறிகுறிகளென மற்ற பிள்ளைகள் கருதினர். ஆதலின், இவருடைய பள்ளி வாழ்க்கையினின்று இவர் மிகவும் இன்பம் பெறவில்லை. இவர் தந்தை, இவரை அடிக்கடி வெளியே அழைத்துச் சென்று, அந்நகரின் சிறப்புக்களைக் காட்டியும் விளக்கியும் வந்தார். இவ்வாறு அந்நகரின் பழமையான கோட்டை கொத்தளம், கட்டிடங்கள் யாவற்றையும் கண்ணுறும் போதும், தன் தந்தை அவற்றின் வரலாற்றைத் தம் இன்மொழிகளால் கூறும் போதும், ஜேம்ஸ் பள்ளியில் தாம் பட்ட துயரை மறந்து களிப்பெய்தினர்.

இளமை நீங்கி, இளங்காளையாய் இவர் ஆகும் காலத்தே இவர் அறிவும் விரைவுடன் வளர்ந்தோங்க லாயிற்று. தம் பள்ளிப்பாடங்களில் ஊக்கங் கொண்டு, செவ்வனே அவற்றைக் கற்று வரலாயினர். தொடக்கத்தினின்றே எண்நூலில் (Mathematics) தமக்குள்ள திறமையை இவர் காட்டி வந்தார். தம் பதினான்காவது ஆண்டில் அக்கல்விக் கழக மாணவரில் எண்நூலில் சிறந்தவர்க் களிக்கப்படும் பதக்கத்தை இவர் பெற்றார். செய்யுள் யாப்பதிலும் தன் வன்மையைக் காட்டி, அக்கலையில் சிறந்தவர்க்கு அளிக்கப்படும் பரிசையும் பெற்றார்.

இவர் தந்தை, தன் மகன் எண் நூலில் காட்டிய திறமையைக் கண்டு மகிழ்ந்தனர். அவ் வூக்கம் குன்றாதிருக்க வேண்டுமெனக் கருதி, இவர் தந்தையார் இவரை எடின்பரோ அரச விஞ்ஞானச் சங்கத்தில் (Edinburgh Royal Society) நடைபெற்ற விரிவுரைகளைக் கேட்க அடிக்கடி அழைத்துச் செல்லலாயினர். இவ் விரிவுரைகளைக் கேட்டதன் விளைவாய்,

ஜேம்ஸ் தாமும சிந்திக்கலாயினர். இவற்றினின்று, இரு குண்டூசிகளையும் மெல்லிய கயிற்றையும் கொண்டு, ஒரிய வட்டத்தை (Ellipse)ப் பிழையின்றி வரையக் கூடிய புதிய முறை யொன்றை இவர் அறிந்தார்; அதைப் பற்றித் தந்தையாரிடம் கூறினார். தன் மகன் கண்டு பிடித்த புது முறையைப்பற்றி ஜான் மாக்ஸ்வெல் தாமறிந்த மற்ற எண்ணியல் அறிஞருக்கு அறிவித்தார். அவ் வறிஞரும் இளம்ஜேம்ஸின் அறிவைப் பாராட்டி, தம் புது முறையைப்பற்றின விவரத்தை அரச சங்கத்தினர் முன்னிலையில் இவர் எடுத்துக் கூறுவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். இவ்வாறு அறிஞர் சங்க மொன்றில், தாம் கண்டுபிடித்த புதுமையைப் பற்றி எடுத்துக் கூற, ஜேம்ஸ் மாக்ஸ்வெலுக்குத் தம் பதினோராம் ஆண்டிலேயே வாய்ப்பு கிடைத்தது. ஜேம்ஸ் தம் புது முறையைப் பற்றிப் பேசிய பின், அச் சங்கத்தினருள் ஒருவராகிய பேராசிரியர் போர்ப்ஸ் (Professor Forbes) ஜேம்ஸின் முறையை மிகவும் பாராட்டிப் பேசினார். இவ்வாறு தம் இளமையிலேயே, ஜேம்ஸ் பேராசிரியர் போர்ப்ஸின் சீரிய நட்பைப் பெற்றார்.

எடின்பரோ கல்விக் கழகத்தில், பத்தாவது ஆண்டில் தொடங்கிய இவரது பள்ளிப்படிப்பு, பதினாறாவது ஆண்டில் முடிவடைந்தது. இதன் பின் இவர் எடின்பரோ பல்கலைக் கழகத்தில் சேர்ந்தார். அங்கு அளவை நூல் (Logic,) அகவியல் நூல் (Metaphysics,) அற நூல் (Ethics) இவற்றைப் பற்றின விரிவுரைகளைத் தவறாது கேட்டு வந்தார். இந் நூல்களில் தாம் பெற்ற பயிற்சி, விஞ்ஞான ஆராய்ச்சிகளை முறையாகச் செய்யவும் அவற்றின் விளைவுகளை சீர்தூக்கி முடிவுகளைப் பெறவும், பிற்காலத்தில் தமக்கு மிகவும் உதவியது என இவர் கூறியுள்ளார். இன்னும், இப் பயிற்சியே, தாம் ஆராயும் பொருள்களைப் பற்றி மட்டுமறிந்த குறுகிய மனப்பான்மையுடைய விஞ்ஞானியா யிராமல், பரந்த நோக்கமுடைய பேரறிஞர் என்னும் பெரும்புகழ் இவர் எய்துவதற்கும் ஏதுவாயிற்று. இவர், அப் பல்கலைக் கழகத்துக் கல்வி பயின்ற நாளிலேயே. போர்ப்ஸ் (Forbes,) கெல்லண்ட் (Kelland,) ஹாமில்டன் (Hamilton) போன்ற பேராசிரியர்களின் நட்பைப் பெற்றாரினும், மற்ற மாணவருடன் அதிகமாய் இவர் பழகுவதில்லை. இங்கும் இவருடைய நடத்தை மற்ற மாணவருக்கு விந்தையாகவே தோன்றியது. அப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்த பின், ஜேம்ஸ் தம் ஆராய்ச்சிகளில் மிகவும் ஆர்வத்துடன் ஈடுபடலாயினர். இவ் வாராய்ச்சிகள், திண் பொருள்கள் (Solids) திருகப்பட்டதனாலோ, நீட்டப்பட்டதனாலோ, அல்லது வேறு எவ் வகையிலோ தம் இயல்பான நிலையினின்று மாற்றப்பட் டிருக்கும்போது, அவற்றினூடே ஒளி பாய்வதால் ஏற்படும் விளைவுகளைப் பற்றினதாகும். இவ் விளைவிகளைப் பற்றின விரிவான கட்டுரை யொன்றை எழுதி மாக்ஸ்வெல் அதனை எடின்பரோ அரச விஞ்ஞானச் சங்கத்தின் தலைவருக்கு அனுப்பினார். இதை அனுப்பிய காலத்து, மாக்ஸ்வெல் பத்தொன்பது ஆண்டினரேயாம். இக் கட்டுரையில் இவர் வெளிப்படுத்திய அறிவுத்திறனை, விஞ்ஞான வளர்ச்சியைப் பெரிதும் போற்றிவந்த பேராசிரியர் போர்ப்ஸ் நன்கு உணர்ந்தனர். உணர்ந்து, விஞ்ஞானத்திற்சிறந்த கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திற்கு இவரை அனுப்புமாறு இவர் தந்தையாரை போர்ப்ஸ் வற்புறுத்தினார். இவர் தந்தையாரும் அவ்வாறு செய்தற்கு இணங்கினார். இங்ஙனம்

1850-ம் ஆண்டில், அக்டோபரில் மாக்ஸ்வெல், கேம்ப்ரிட்ஜ் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பீடர்கவுஸ் கல்லூரி (Peterhouse College)யில் சேர்ந்தனர். ஓராண்டின் பின் அதை விட்டு நீங்கி, ட்ரினிடி (Trinity) கல்லூரியில் இவர் சேர்ந்தார். முன்போலன்றி, இங்கு, மாக்ஸ்வெல் தம் முதலாண்டிலேயே, ஏனைய மாணவர் பலரின் நட்பைப் பெற்றார்.

1853-ம் ஆண்டில், தம் தேர்வு பற்றிய கடின உழைப்பினால், நோய் வாய்ப்பட்டார். ஆயினும், 1854-ம் ஆண்டு, ஜனவரியில் நடைபெற்ற தேர்வுக்கு இவர் செல்ல இயன்றது. அத் தேர்வில் வெற்றி பெற்றதுமன்றி இரண்டாவது இடத்தையும் பெற்றார். இதையறிந்த இவர் தந்தையாரும் உளமகிழ்ந்தனர். மாக்ஸ்வெல் கேம்ப்ரிட்ஜிலிருந்த நான்கு ஆண்டுகளும், ஆராய்ச்சிகளில் ஈடுபடவில்லை; நூற் பயிற்சியிலேயே முற்றும் ஈடுபட்டிருந்தனர். தேறிப் பட்டம் பெற்றவுடன், இவர், தாம் மாணவராயிருந்த கல்லூரியிலேயே, அக் கல்லூரி அதிகாரிகளால் பொருளுதவி பெற்று தம் ஆராய்ச்சிகளில் மீண்டும் ஈடுபடலாயினர். இவ் வாராய்ச்சிகளின் விளைவாய், 'பாரடே விளக்கிய வலிமைக் கோடுகள்' (Farday's Lines of Force) என்ற பொருள் பற்றி 1855-ம் ஆண்டில் ஒன்றும், 1856-ம் ஆண்டில் மற்றொன்றுமாக, இரு பெரும் ஆராய்ச்சிக் கட்டுரைகளை இவர் வெளியிட்டார். இக் கட்டுரைகளைப் படிக்கும் எவரும் மாக்ஸ்வெலின் நுண்மாண் நுழை புலனையும், தெளிந்த அறிவையும், கூர்த்த மதியையும் ஒருங்கே பெற்றவர் என உணராமலிரார். 1855-ம் ஆண்டிலேயே, பல நிற ஒளிகளைப் பற்றியும், அவற்றின் கலவைகளால் விளையும் நிறங்களைப் பற்றியும் இவர் ஆராயத் தொடங்கினர். இவ் வாராய்ச்சிகளின் விளைவாய் இவர் வெளியிட்ட கட்டுரைகளின் சிறப்பைப் பாராட்டி அரச விஞ்ஞானச் சங்கத்தினர், 1860-ம் ஆண்டில், ரம்போர்ட் பதக்கத்தை (Rumford Medal) இவருக்கு அளித்தனர். ஒளியைப்பற்றி ஆராயுங்கால், வானில் காணப்படும் பல கோள்களை இவர் உற்று நோக்கலாயினர். இவற்றில் சனிக்கோளைச் சுற்றிச் சிறிதே மங்கிய ஒளியுடன் தோன்றும் அநேக வட்டங்களைக் கண்டனர்; இவ் வட்டங்கள் ஏன் தோன்றுகின்றன என்பதைப்பற்றிச் சிந்திக்கலாயினர். நெடிது சிந்தனை செய்து, அவ் வொளி வட்டங்களுக்குக் காரணம் யாது என்பதை உணர்ந்தார். நம் உலகைச் சுற்றிவரும் மதியொன் றிருப்பதுபோலவே, சனிக் கோளைச் சுற்றிவரும் நுண்மதிகள் பலவுள்ளன வென்றும், அவ்வாறு அவை சுழலும்போது ஒளி வட்டங்கள் தோன்றுகின்றன வென்றும் இவர் விளக்கினர். இவ்வாறு ஒன்றின் பின் ஒன்றாய் இவர் வெளியிட்ட விஞ்ஞான விவரங்களைப் பலரும் அறியலாயினர். இருபத்தைந்தாண்டுகளே நிரம்பிய இளைஞரான விஞ்ஞானியின் புகழ் எங்கும் பரவியது. மாக்ஸ்வெல் இவ் வாராய்ச்சிகளிலேயே தம் பொழுதை முற்றும் கழிக்கவில்லை. கேம்பிரிட்ஜ் நகரத்திருந்த தொழிலாளிகளுக்கு, அவர்கள் தம் பணிகளி லீடுபடாதிருந்தபோழ்து, இவர், கல்வி புகட்டி வந்தார். இவ்வாறு மாக்ஸ்வெல் அரிய சமூகத்தொண்டும் ஆற்றி வந்தனர்.

இக் காலத்து, இவர் தந்தையாரின் உடல் நலம் குன்றலாயிற்று. ஆதலின் மாக்ஸ்வெல் அவாருகில் சென்றிருத்தல் இன்றியமையாத தாயிற்று. அச் சமயமே, தன் தந்தையாரின் இல்லாகிய கிளன்லேயருக்கு அருகிலிருக்

கும் அபர்டீன் (Aberdeen) நகரிலுள்ள மாரிஷல் கல்லூரியில் (Marischal College), விஞ்ஞானப் போசிரியர் ஒருவர் வேண்டப்பட்டார். ஆதலின் அப் பதவியைப் பெறவேண்டி மாக்ஸ்வெல் தம் விண்ணப்பத்தை அனுப்பினார். அவ் விண்ணப்பத்தைப்பற்றிக் கல்லூரி ஆட்சியாளர் கருதும்முன், மாக்ஸ்வெலின் தந்தையார் இறந்தனர். பின்னர், அவ்வாசிரியர் பதவிக்கு மாக்ஸ்வெலே கல்லூரி ஆட்சியாளரால் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரும் அப்பதவியை யேற்றார். இவர் அங்கிருந்த காலத்தே அக் கல்லூரித் தலைவரின் மகளைக் காதலித்து, 1858-ம் ஆண்டில் மணந்தனர். ஆயினும், இவர் அக் கல்லூரியில் ஆசிரியராய் மூன்றாண்டுகளே யிருக்க நேர்ந்தது. ஏனெனில், 1860-ம் ஆண்டில் மாரிசல் கல்லூரி அரசக் கல்லூரியுடன் இணைக்கப்பட்டது. இவ்வாறு மாரிசல் கல்லூரி மறையவே, மாக்ஸ்வெலும் தம் பதவியை இழந்தார். எனினும் இவர் அதைப் பொருட்படுத்தவில்லை. தம் தந்தை இறந்துவிட்டாராதலின், தன்னூர் சென்று, மாக்ஸ்வெல் நிலக் கிழவருக்கான பணிகளில் ஈடுபடலாயினர். பின்னர். எடின்பரோ பல்கலைக் கழகத்தில், விஞ்ஞானப் போசிரியர் வேண்டப்பட்டபோது, மாக்ஸ்வெல் அப்பதவியைப் பெற விண்ணப்பித்து, பெறாது போயினர். மாக்ஸ்வெல் விஞ்ஞானப் பேரறிஞராயினும், தானறிந்தவற்றை மாணவருக்குப் புலப்படும்படி எடுத்துக் காட்டும் சொல் வன்மை பெறாதவர் என்பதே இவரைத் தேர்ந்தெடுக்காததற்குக் காரணம் என அப் பல்கலைக் கழக ஆட்சியாளர் கூறினர். தம் நாட்டினராகிய ஸ்காட்ச் அதிகாரிகள் இவ்வாறு இவரைப் புறக்கணித்தாரெனினும், ஆங்கில அறிஞர்கள் இவரை லண்டன் பல்கலைக் கழகத்தின் பௌதநூல் போசிரியராக, 1860-ம் ஆண்டில் அமர்த்தினர். இவர் லண்டனிலிருந்த காலத்து, வளிக்களின் (Gases) தன்மையை விளக்கும் இயக்கவியல் கொள்கைகளை (Kinetic Theory of Gases) வெளியிட்டனர். பின்னர், 1864-ம் ஆண்டில், அரச விஞ்ஞானச் சங்கத்தினர் முன்னிலையில், 'மின்சார-காந்தப் புலத்தைப்பற்றின இயக்கவியல் கொள்கை' (Dynamic Theory of the Electro magnetic Field) என்ற பொருள்பற்றி நீண்டதோர் விரிவுரை நிகழ்த்தினர். அக் கொள்கையைப்பற்றி விரித்துக் கூறுங்கால், மின்சார-காந்தப் புலத்தின் பண்புகள் யாவற்றையும், இருபது எண்ணியல் இணைப்புத் தொடர்கள் (Mathematical Equations) பாற்பட்டவையாய்க் காட்டலாம் என்று இவர் விளக்கிக் கூறினர். இவ் விணைப்புத் தொடர்களின் உதவிகொண்டு மேலும் ஆராயுங்கால் ஒளி மின்-காந்த இயல்பினையுடையது என நன்கு அறியலாம் என்று இவர் தெளிவுறுத்தினர். இவ்வாறு தம்மின் பெயர் என்றும் விளங்கும்படி செய்த மின்சார-காந்த வியல் கொள்கையை இவர் நிலைநாட்டினர்.

மாக்ஸ்வெல் லண்டன் பல்கலைக் கழகப் போசிரியராய் ஐந்து ஆண்டுகளே தொண்டாற்றினர். அதன்பின், இவர் உடல் நலம் குன்றலாயிற்று. தம் பணியைச் செவ்வனே ஆற்ற இயலாததை யுணர்ந்து, இவர் தம் பதவியினின்று விலகினர். இதைவிட்டு விலகியபின், மாக்ஸ்வெல் மீண்டும் தன்னூர் சென்று க்ளென்லேயரெனும் தன் இல்லத்தில் இருந்து வரலாயினர். இவர், போசிரியர் பதவி பெறுவதைவிட, பண்ணைத் தொழிலாற்றுவதையே மிகவும் விரும்பினர். ஆதலின், 1868-ம் ஆண்டில், லெயின்ட்

ஆண்ட்ரூஸ் பல்கலைக் கழகத்தின் (University of Andrews) கல்லூரியில்
தலைவர் பதவி அளிக்கப்பட்டபோது, அதை யேற்கவில்லை. தம் இல்லத்தை
விட்டகலாது, "காந்தமும் மின்சாரமும்" என்ற பொருள்பற்றி விரிவான
நூலை எழுதுவதிலேயும், தாம் நிலக் கிழவரென்ற முறையி லாற்றவேண்
டிய பணிகளிலேயும் முற்றும் ஈடுபட்டிருந்தனர். மிக்க சமயப்பற்றுடைய
வராதலின், இவர் இக்காலத்தே தவறாது ஆலயஞ் சென்றும் வந்தனர்.
இங்கு இருக்குங் காலத்து, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழக சோதனையாளர்
என்ற முறையில் அங்கு பலமுறை சென்று வந்ததுண்டு. அவ்வாறு மாண
வரைச் சோதனை செய்ததனால் தான் பெற்ற அனுபவத்தின் வாயிலாய், அப்
பல்கலைக் கழகத்தில் பூதநூல் கற்பிக்கப்படும் பயிற்சி முறை சீர்திருத்தப்பட
வேண்டுமென இவர் உணர்ந்தார். பின் தம் கருத்தை இவர் அப் பல்கலைக்
கழக ஆட்சியாளருக்கும் அறிவித்தனர். இதன் விளைவாய், அவர்கள், விஞ்
ஞானியக் கல்வியின் வளர்ச்சிக்கான வழிகளை ஆராய்ந்தறிய ஒரு குழுவினைத்
தோற்றுவித்தனர். அக் குழுவினர், தம் அலுவல்களைச் செவ்வனே
செய்து, புதிய முறைகளில் தேர்ந்த விஞ்ஞானப் பேராசிரியர் ஒருவரும்,
புதிய முறைப் பரிசீலனைகளை எடுத்துக் காட்டி விளக்கும் ஆற்றல் பெற்ற
ஆசிரியர் ஒருவரும் வேண்டுமென்றும், புதிய வகையான ஆராய்ச்சிகளுக்
கேற்ற சோதனைக் கருவிகள் கொண்ட சோதனை மன்றமொன்று திறவப்
படவேண்டு மென்றும் விளக்கிய அறிக்கை யொன்றின் மூலம், அவ்வாட்சி
யாளருக்குத் தம் கருத்தை வெளியிட்டனர். அவர்கள் இவ் வறிக்கையில்
கண்டவாறு செய்ய வேண்டுமாயின், அதனால் ஏற்படும் அதிகப்படியான
செலவுக்குப் பொருளை எவ்வாறு பெற இயலும் எனக் கருதலாயினர். அக்
காலத்தே, அதாவது 1871-ம் ஆண்டில் அப் பல்கலைக் கழகத்தின் செயற்
றலைவரா யிருந்த (Chancellor) டெவன்ஷயர் எனும் உயர்குடி மகனார்
(Duke of Devonshire) சோதனை மன்றம் திறவதற்காகும் பொருளைத்
தாமே நன்கொடையாக அளிக்க ஏற்றுக்கொண்டார். இதைப் பின்பற்றி
அவ்வாட்சிக் குழுவினர், ஆசிரியர்களுக்காகும் பொருட் செலவை, பல்
கலைக் கழக வருமானத்தினின்று எவ்வாற்றானும் ஈடுகட்டுவதற்கான வழி
யைக் கண்டுபிடித்தனர். இதன்பின் அப் பேராசிரியர் பதவிக்கேற்ற விஞ்
ஞானப் பேரறிஞர் மாக்ஸ்வெலே யென்று முடிவு கட்டி, அப் பதவியை
இவருக்களித்தனர். மாக்ஸ்வெல், முதலில் அப்பதவியை யேற்க மறுத்தா
ராயினும், தம் நண்பர்களான பல விஞ்ஞானிகளின் வேண்டுகோட்
கிணங்கி, இறுதியில் அப் பதவியை யேற்க இசைந்தனர்.

டெவன்ஷயர் எனும் கோமகனார், ஹென்ரி காவண்டிஷ் (Henry
Cavendish) என்பவரின் கொடி வழி வந்தவர் ஆவார். ஹென்ரி காவண்
டிஷும், அவர் காலத்தில் விஞ்ஞானத் துறையிலீடுபட்டு, பல அரும் பணி
களாற்றியவர். ஆதலின், தம் முன்னோரானவரின் பெயரை யொட்டி, புதி
தாய்த் திறவப்படவேண்டிய சோதனை மன்றத்திற்கு 'கேவண்டிஷ் சோதனை
மன்றம்' எனப் பெயரிடல் வேண்டுமென அவர் விரும்பினார். பல்கலைக்
கழக அதிகாரிகளும் அவ்வாறே பெயரிட மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்ட
னர். மாக்ஸ்வெல், தம் பதவியில் அமர்ந்த பின், கேவண்டிஷ் சோதனை
மன்றத்தைத் தக்க முறையில் கட்டவேண்டியதற்கான ஏற்பாடுகளைச் செய்
தலையும், கட்டிட வேலையைக் கவனித்தலையுமே தம் முதற் கடமையாய்க்

கருதினர். இக் கடமையை இவர் பொறுப்புடனும் திறமையுடனும் ஊக்கத்துடனும் ஆற்றினர். அச் சோதனை மன்றத்தினுள், ஆராய்ச்சிக்கான அறைகள், விரிவுரை நிகழ்த்துவதற்கான கூடங்கள், இன்னோரன்னவற்றை நன்முறையில் அமைப்பதற்கான விரிவான திட்டங்களை வரைந்தார். இவ்வாறு, மாக்ஸ்வெல் போட்ட திட்டப்படி அமைக்கப்பட வேண்டுமாயின், டெவன்ஷயர் கோமகனுர் முதலில் அளித்த நன்கொடைக்கு மேலும் பொருள் வேண்டுமென அதிகாரிகள் உணர்ந்து என்ன செய்வதெனத் தோன்றாது திகைத்தனர். இந் நிலைமையில் டெவன்ஷயர் கோமான் மீண்டும் உற்ற துணை நல்கினர். அம் மன்றம் நிறுவதற்கான பொருள் முழுதையும் தாமே ஈந்துதவினர். இவ்வாறு, மாக்ஸ்வெலின் உளத்திற்கியைந்தவண்ணம் அச்சோதனை மன்றம் நிறுவப்பட்டது. 1874-ம் ஆண்டில் அதன் திறப்பு விழாவும் நடந்தேறியது. இத் திறப்பு விழாவைப் பற்றின நிகழ்ச்சி நகை விளைவிப்ப தொன்றாகும். மாக்ஸ்வெல் அவ்விழா எப்பொழுது நடைபெறும் என்று பலருக்கு அறிவிக்கவில்லை. ஏனெனில், இவர் தாம் செவ்வனே சொற்பொழிவாற்றும் சொல்வன்மை படைத்தவரன்று என உணர்ந்து, அம்மன்றத்தில் தானியற்றப்போகும் முதற் சொற்பொழிவைப்பற்றி விளம்பரம் செய்யவில்லை. ஆதலின் அம் மன்றத்திலேயே, ஒருபுறமாயுள்ள அறை யொன்றில் ஏறக்குறைய இருபது மாணவராலேயே ஆன கூட்டமொன்றின் முன்னரே தம் திறப்பு விழாச் சொற்பொழிவை மாக்ஸ்வெல் நிகழ்த்தினர். அச் சொற்பொழிவு, அப் புதிய சோதனை மன்றத்தில் பணியாற்றுபவர் தந்நலங் கருதாது, விஞ்ஞான முன்னேற்றத்தையே தம் நோக்கமாகக் கொள்ளல்வேண்டும் எனும் பொருளை விளக்குவதாகும். இன்னும் அவர் கூறியதாவது :—

"கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம் 'உள்ளது சிறத்தல்' (Evolution) கொள்கையை யொட்டி, காலத்திற் கேற்றவாறு வளர்ச்சியுறும் இயல்பினையுடையதாதலின், இக் காலத்திற்கேற்ற சோதனை வழியான விஞ்ஞானத்தைப் போற்றி வருகின்றது."

"......நூற் பயிற்சியால் பெறும் அறிவை, சோதனை வாயிலாய் அனுபவத்தில் பெறும் அறிவுடன் இணைத்துச் சிந்தனை செய்த பின்னரே, தெளிந்த அறிவுடன் நாம் துலங்குவோம்."

"......விஞ்ஞானத்தின் வினைவியல் விளைவுகளால் சமூக வாழ்க்கையிலும், விஞ்ஞானக் கொள்கைகளைப்பற்றிய கருத்துக்களைப் பாமரரும் அறியும் வண்ணம் பரப்புவதால் மக்கள் உள்ளத்திலும், பெரும் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன."

"......இச் சோதனை மன்றம் நிறுவப்பட்டதற்குத் தலையாய நோக்கம், பலவகையான விஞ்ஞான ஆராய்ச்சி வழிகளையும் அறிந்து, அவற்றைக் கையாள்வதால் கிடைக்கும் விளைவுகளை ஒப்பிட்டுப் பார்த்து, அவற்றில் சிறந்த வழிகள் யாவையெனக் காண்பதேயாம்."

"......பலரும் சேர்ந்து ஒத்துழைப்பதினாலேயே சிறப்பான விஞ்ஞான விளைவுகளைப் பெறலாம்."

"......விஞ்ஞானிகள், விஞ்ஞானீயமான பணிகளிலேயே முற்றும் ஈடுபடுவதால் குறுகிய மனமுடையவராகின்றனர். ஆதலின், அவர்கள்

இலக்கிய வரலாற்றுத் துறைகளிலும் சிறிதேனும் தம் கருத்தைச் செலுத்தவேண்டியது அவரது கடமைகளில் முக்கியமான ஒன்றாகும்."

இவ்வாறு இயற்றிய சொற்பொழிவின் இறுதியில், தாம் அடுத்ததாக "சூடு" எனும் பொருள்பற்றித் தொடர்ச்சியான பல விரிவுரைகள் நடுமன்றத்தில் நிகழ்த்தப்போவதாக மாக்ஸ்வெல் அறிவித்தனர். அறிவித்தவாறே, பலநாட்களுக்குப் பின் பாடம் கற்பிக்கும் முறையில், இவர் நடுமன்றத்தில் சூட்டைப்பற்றின முதல் விரிவுரையை நிகழ்த்தினர். இதுவே சிறப்பு விழா விரிவுரையென எண்ணி, அப் பல்கலைக் கழகப் பேராசிரியர் பலர் அங்கு வந்து முன்னணியில் அமர்ந்திருந்தனர். மாக்ஸ்வெல், ஆசிரியருக்குகந்த அமைதி குடிகொண்ட முகத்துடன் வெப்ப நிலையையும் அது அளக்கப் படும் வெவ்வேறு வகைகளையும் பற்றிக் கூறும் தொடக்கப் பாடத்தை, நகை ததும்பி மின்னும் கண்களுடன் தொடங்கினர். இதைக் கேட்டு, முன்னணியிலிருந்த பேராசிரியர் அடைந்த வியப்பையும் ஏமாற்றத்தையும் அவர் முகங்களே காட்டின.

மாக்ஸ்வெல் கேவண்டிஷ் சோதனை மன்றத்தின் தலைவராய் எட்டாண்டுகள் பணியாற்றினர். அக்காலத்து, 'ஹென்ரி காவண்டிஷ் செய்த மின்சார ஆராய்ச்சிகள்' (The Electrical Researches of the Honourable Henry Cavendish) என்ற நூலைத் தொகுத்து வெளியிட்டனர். 1870-ம் ஆண்டில் பிரிட்டிஷ் விஞ்ஞான முன்னேற்றச் சங்கத்தின் (British Association for the Advancement of Science) ஆண்டு விழாக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். தம் தலைமையுரையில் எண்ணூலுக்கும் பூத நூலுக்கு மிடையுள்ள தொடர்புகளைப்பற்றி விளக்கினர்.

1879-ம் ஆண்டில் இவர் உடல் நலம் குன்றி மிகவும் நலிவுற்றார். அவ்வாண்டிலேயே நவம்பர் 5-ம் நாள் இவ்வுலக வாழ்க்கையை நீத்தனர். இறந்தபோது இவர் நாற்பத்தெட்டாண்டே நிரம்பியராவார்.

இவருடைய ஆராய்ச்சிகளில் தலையாயது, ஒளி, மின், காந்த இயல்பினது என நிலைநாட்டின தொன்றேயாம். 1887-ம் ஆண்டில், ஹெர்ட்ஸ் (Hertz) எனும் விஞ்ஞானி, மாக்ஸ்வெல் கொள்கையின் உண்மையை சோதனை வாயிலாகக் காட்டினர். இவற்றினின்று தொடங்கிய ஆராய்ச்சிகளின் விளைவுகளாலேயே, கம்பியில்லாது தொலை செய்தி அனுப்பும் முறையையும், வானொலி பரப்பும் முறையையும் நாம் பெற்றோம். நுண் துகள்களின் இயல்புகளைப்பற்றி இவர் வெளியிட்ட கொள்கைகளினின்றெழுந்த ஆராய்ச்சிகளின் விளைவுகளினின்றே, இக்காலத்து, மாக்ஸ்ப்ளாங்க் என்ற விஞ்ஞான அறிஞர், ஒளி-மின் மாறுதல்களுக்கும், (Photo Electricity), கரும் பொருள்களினின்று வெளிப்படும் ஒளியின் (Black Body Radiation) இயல்பிற்கும் அடிப்படையான நுண்ணூற்றலைப்பற்றிக் கூறும், 'வினைத்துகள்' (Quantim) கொள்கையை நிலைநாட்டினர். இக்கொள்கையே இப்பொழுது பூத-இயைபு நூல் முற்றும் விரவியுள்ளது. இன்னும் இக்காலத்து விஞ்ஞானக் கொள்கைகளில் முக்கியமானதெனக் கருதப்பட்டு வருவது, ஐன்ஸ்டீன் நிலைநாட்டிய தொன்றாகும். இவர், பொருள்களின் இயக்கங்களை ஒன்றையொன்று பொறுத்த மட்டில்தான் அளக்க இயலுமென்றும், முற்றும் நிலையான பொருளொன்று நாமறிந்த எவற்றினுள்ளும் இல்லையாதலால், அவ்வாறான தொன்றுண்டு எனக் கருதும் இயக்க வியல்

# தலைவனும் தலைவியும்

(காருகுடி-கி. குழந்தை உடையார்.)

பன்னீராட்டைப் பிராயமுடைய ஒரு மங்கை தன் தோழியருடன் ஒரு பொழிலினிடத்தே மலர் கொய்து நீராடி விளையாட வருவாள். பதினாறு வயதுடைய ஆண்மகன் ஒருவன் வேட்டை மேற்கொண்டு தன் படை சூழ அப்பெண் இருக்கும் பூம்பொழிலுக்கு அணித்தேயுள்ள காட்டுக்கு வருவன்; இவ்விருவரும் இறை கூட்டுவிக்கத் தத்தம் குழுவினரைப் பிரிந்து ஓர் இடத்தில் சந்திப்பர். இவ்விருவரையும் "தலைவன்—தலைவி" என்று நூல்கள் கூறும். திடீரென ஒருவரை ஒருவர் கண்டு வியந்து தெளிந்து காந்தர்வ முறையிற் கூடுவர். பின்னர், தலைவன் தோழியைத் தன் வயப்படுத்திக்கொண்டு, அவள் உதவியால் தலைவியை அடிக்கடி சந்தித்துச் செல்லும் பழக்கம் கொள்வான். காலடைவில் இருவருக்கும் உள்ள களவு ஒழுக்கம் சிலருக்கும், பலருக்கும் பரவி, ஊரில் அலர் தோன்றும்போது, தலைவியின் பெற்றோர் அவளை எச்சரிப்பர். தலைவியின் உடல் நாளுக்குநாள் மெலிவது கண்டு செவிலித்தாய், அணங்கோ,பேயோ அவளை வருத்தியதாக எண்ணி வேலன் என்கிற பூசாலியைக் கொண்டு முருகனுக்குப் பூசை போட்டு ஓர் ஆட்டைப் பலியிட நினைப்பாள்.

அதனை யறிந்த தோழி, "ஆட்டைப் பலியிட வேண்டாம்; இவள் கொண்ட மெலிவுக்குக் காரணம் இதுவாகும்" எனத் தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பைச் செவிலிக்குக் குறிப்பில் உணர்த்துவாள். இங்ஙனம் இவள் கூறும் முறை விசித்திரமானது. தலைவனிடம் செவிலி முதலியோருக்கு அன்பு தோன்றுமாறு சில பொய்யுரைகளைக் கூறுவாள். "தலைவி புனல் விளையாடுகையில் நீர்ச்சுழியில் அகப்பட்டாள்; அந்நிலையில் ஒரு தலைமகன் தோன்றி அவளைக் காத்தான்" என்றும்,

"தலைவி மலர் பறிக்கையில் தனக்கு எட்டாத மலர் ஒன்றைப் பறிக்க விரும்பினாள். அவ்வமயம் ஒரு தலைமகன் தோன்றி அம் மலரைப் பறித்துத் தந்தான்" என்றும்,

"தலைவி எம்மோடு வந்தபோது களிறு ஒன்று எதிர்ப்பட, அதைக் கண்ட தலைவி அச்சமுற்று நடுங்க, திடீரென ஒரு தலைமகன் தோன்றி அக்களிற்றினின்றும் தலைமகளைக் காத்தான். தலைமகள் அச்சமுற்று அவனை அணைத்துக் கொண்டாள்" என்றும் தலைவியின் களவொழுக்கத்தைச் செவி

---

விதிகள் முற்றும் சரியானவை யல்லவென்றும், விளக்கியுள்ளார். இவ்வாறாக அவர் தம் 'பொருத்தவியல் கொள்கையை (Theory of Relativity) நிலைநாட்டியுள்ளார். மாக்ஸ்வெல் விளக்கிய மின். காந்தப் புலத்தைப்பற்றின எண்ணியல் இணைப்புக்களைப்பற்றி, மேலும் மேலும் சிந்தனை செய்ததின் விளைவாகவே, தம் கொள்கையை வெளியிட நேர்ந்தது என ஐன்ஸ்டீன் கூறியுள்ளார். இவ்வாறு இக்காலத்தில் விஞ்ஞான அறிவு முழுமையையும் தம்முள் கொண்டவை யெனக் கருதப்படும் இரு பெரும் கொள்கைகளுக்கு வழிகாட்டியவர் மாக்ஸ்வெலே யாவார். அறிவிற்கோர் எல்லையில்லையாதலின் இன்னும் எத்தனை விஞ்ஞானப் பெருக்கத்திற்கு மாக்ஸ்வெல் அடிகோலியவர் ஆவரோ யார் கண்டார்?

விக்கு உணர்த்துவாள். இம்மூன்றும் முறையே, 'புனல்தரு புணர்ச்சி', 'பூத்தரு புணர்ச்சி', 'களிறுதரு புணர்ச்சி' எனப்படும்.

இதற்கு இடையில் தலைவன் தன் முயற்சியால் பொருள் ஈட்டிக் கொண்டு தலைவியின் தந்தையிடம் பெண் கேட்க வருவான். தலைவியின் பெற்றோர் மணவினைக்கு உடன்படுவாராயின், மணம் தலைவி இல்லத்திலேயே, நடைபெறும். பெற்றோர் மறுப்பின், தலைவன் தோழியின் உடன்பாட்டின்மீது தலைவியைத் தன் ஊர்க்குக் களவில் கொண்டு செல்வன். இது "உடன் போக்கு" எனப்படும். தலைவனது ஏற்றத்தையும், தலைவி அவன்பால் கொண்டுள்ள அளவற்ற காதலையும் உணர்வாராயின், பெற்றோர் அவர் பின் சென்று அவரைத் தம் ஊருக்கு அழைத்து வந்து மணம் முடித்தலும் உண்டு.

தலைவன் பரத்தையர் பிரிவதேயன்றி கல்வி காரணமாகவும், பொருள் காரணமாகவும், வேந்தர்க்கு உதவவும், அறச்சாலைகளைக் காக்கவும், தூதாகப் போவதற்கும் பிரிதல் உண்டு. இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் கால எல்லை உண்டு. பிரிவுக் காலத்தில் தலைவி கற்பொடு பொருந்தி ஆற்றி இருப்பாள். பிரிவு நீட்டித்த இடத்து அவள் வருந்துதலும் உண்டு. இந்த அக ஒழுக்கத்தை ஐந்திணையாக்கி விரிப்பர். திணை என்பது ஒழுக்கம். நிலமும் இடமும் திணை என்னும் பெயராலேயே வழங்கப்படுகிறது.

மணந்து கொண்ட தலைவனுக்கு தலைவியைத் தவிர பரத்தையர் சிலரிடத்தும் பழக்கம் உண்டு. தலைவன் பரத்தையரோடு தொடர்புடையவன் என்பது தலைவி உணர்வாளாயின் அது காரணமாக இருவர்க்கும் "ஊடல்" உண்டாகும். இவர் தம் ஊடலைத் தணிக்க தூதர் சிலர் உளர். விருந்தினர் வரவைக் கண்டு தலைவன் தலைவியர் தம்முள் சமாதானம் செய்து கொள்ளலும் உண்டு.

முற்காலத்தில் உண்மைக் காதலியின் உள்ளம் எப்படியிருந்தது எனின், "என் தலைவன் அடிக்கடி என் கண்களையும், தோள்களையும், என் கூந்தலையும், அல்குலையும் பாராட்டி நேற்றுவரை இவண் இருந்தான்; இன்று பிரிந்தான்; அவன் மரங்களற்ற பாலைநிலத்துக்குச் சென்றான். அந்நிலமோ, கடல்போலப் பரந்தது' என தலைவி வருந்துவாள்.

இங்ஙனமே பிரிந்து மீளும் தலைவன் தன் பாகனை விளித்து, "பாக! என் மகனுக்குக் கதைகள் கூறுபவளும், திதலை அல்குலாளுமாகிய என் காதலிக்கு என் தோள்கள் (விரைய அவளை அணைத்தற்கு) வருகின்றன எனக் காக்கைகள் என் வருகையை முன்னரோ உணர்த்தியிருக்குமா?" என்று உள்ளத்தில் ஒருவராலும் களைசெய்ய அரியதொரு காதற்பெருக்கால் கடாவும் கடாவினை நோக்குங்கால், தலைவன் தலைவிபால் கொண்டொழுகும் தன்மை இனிது விளங்கும்.

பறவைகள் திரைகடல் கடந்து இல்லம் நோக்கி மீள்வனவாகவும், காலையிற் சென்ற தன் கணவர் வாராமையால், அவள் கணவனது நெகிழ்ச்சியால், "என் இயற்கை அழகு கெட்டது; தோள்கள் அழகிழந்தன; நெஞ்சம் துணுக்குறுகின்றது; கண்கள் துயின்றில; முகமோ வெளுத்துள்ளது; தலைவிரோடு வெண்பல் காட்டி விளையாடியதன் பயனாக யான் இங்ஙனே விளிவதோ?" என மனம் குமுறுவாள்.

# அடாடா! பாபம்!

('கார்த்திகேயன்')

1

அடாடா! பாபம்! நல்ல குட்டியாச்சே!..........."

"அடி...............பாவிச்செருக்கி! உனக்கேண்டி இந்த புத்தி எட்டிச்சு?..............."

"அடி சண்டாளி! நீ போனதும் இல்லாமெ, சந்தானத்துக்கு தண்டம் வேற வைக்கவா காத்திருந்தே?........."

"அவ தங்கமானவண்ணா! அந்தக் கொடுஞ்சூரி முண்டை மாமியா இருக்காளே! அவ என்ன பண்ணினாளோ?..........."

"அதெல்லாம் ஒண்ணுமில்லேண்ணா! அந்தத் தோசிப்பயல் சப்பன் இருக்கானே, அவனுக்கு ஒட்டல்லே!.........."

2

"அடாடா ரதியாட்டமா அவ தலைமயிரும், முகக்களையும்—அந்த வெள்ளத்தோடு ஒண்ணே போதுமே! சித்திரப்பதுமைன்னாலே அவளுக்குத் தானே தகும்!..........."

"அழகு ஒண்ணு மட்டும் இருந்து என்ன பண்றது? குணம் இருந்தால் தானே!"

"அவ மேலே என்ன தப்பு? அந்தக் கும்பலே அப்பேர்ப்பட்ட கும்பல்ணா!"

"ஒருத்தர் மேலும் ஒண்ணுமிருக்காது, ஏதோ போறாத காலம், கால் தவறுதலா வழுக்கி விட்டிருக்கலாம்."

"அவள் போனதிலே குறைச்சலில்லே! ஊர்லே அவ மண்டையைப் போட்டு ஏன் தான் இப்படி உருட்டுறாகளோ, தெரியல்லே!"

"எல்லாந்தான் இருக்கும். நாலுபேர் நாலு தினுசா பேசுவாகத்தான்! ஊர் வாயை அடக்க முடியுமா, என்ன?........."

3

"வீடுன்னு இருந்தால் நாலுத்தான் இருக்கும். எறத்தாழ இருந்தாலும் எல்லாத்தையும் அனுசரிச்சுட்டுப் போறது தான் பொண்களுக்கு லட்சணம்."

'அவ என்ன பண்ணுவா! சிறுசுதானே! அந்த முண்டைச்சிக்குன்னா அது தெரியணும்."

"அவன் வெறுன அப்பாவிடா! ஒரு பாழுந் தெரியாது. என்னவோ அவ தலையெழுத்து இந்தப் பயலுக்கு கழுத்தை நீட்டணுமுன்னு இருந்தது போலிருக்கு!"

"ஆளு அம்ம குள்ளிப்பயல்! 'ம்'முன்னு இருந்து சமயம் பார்த்துக் கழுத்தை நெறிச்சபிடுவான். ஒரு நா(ள்) ராத்திரி 10 மணிக்கு மேலே அவளை அந்தப்பயல் பேசின பேச்சு! எனக்கல்லவா தெரியும் அவன் சேதி!"

4

"கல்யாணத்தின் போதே கலகந்தானே! அப்பவே தெரியும்—ஒண்ணு அந்தப் பயலோ அல்லது இந்தப் பொண்ணோ 'அவுட்'டுன்னு!"

"என்டாப்பா! பொருத்த நிமித்த மெல்லாம் பார்த்துத் தானே இந்தக் கலியாணம் நடந்தது! எத்தனை இடத்திலே அவன் ஜாதகம் பார்த்தான். இப்படிப் போயிடுவென்னு ஒரு பயகூடச் சொல்லலையே!"

"ஜோஸியமாவது ஜாதக மாவதண்ணே! அதெல்லாம் இந்த நாளிலே ஒண்ணுமே கெடையாதே! ஜோஸ்யக்காரன் வீட்டைப் போய்ப் பாரு!—மொட்டச்சிகள் முட்டு முட்டா யிருப்பானே!"

"அதெல்லாம் ஒண்ணுமில்லேடி அம்மா! அவாளவா விதிப்படி தானே எதுவும் நடக்கும்! நீயும் நானும் என்ன பண்ண முடியும்?"

"என்னத்தைச் சொல்லி என்ன பிரயோஜனம்? அவ சிறுசா யிருந்தாலும் புண்ணியவதி! பூவோடு மஞ்சளோடு 'ஜாம் ஜா'முன்னு போயிட்டா! நாம் கெடந்து போக வழி தெரியாமே திண்டாடறோம்!"

5

"இன்னும் 10 நாளைக்கு இந்த சேதி எங்கேயும் பிரமாதப்படும். ஊர் முழுக்கவும் இதே பேச்சா யிருக்கும். அப்புறம் பழங் கதையாய்ப் போயிடும். இப்படித்தான் எல்லாமே!"

"என்டா! கிராம முன்சிப் போலீஸுக்குத் தெரியப்படுத்தி யிருப்பானே! அந்த வீட்டுக்காரன் சந்தானங் கூட நம்ம பட்டாமணியனுக்கு ஆகாதவனுச்சே!"

"தெரிவிக்கத்தான் இருந்தானும். யாரோ போய் அது நன்னு யிருக்காது. அவ(ள்) போன வயத்தெரிச்சலோட அவனுக்குத் தண்டம் வேறு வைக்க வேண்டாமுன்னு சொன்னப்பறம் சரிதான்னு ரிபோர்ட் ஒண்ணும் அனுப்பல்லேயாம்."

"போறது. அந்த மட்டுமாவது தண்டச் செலவு மிச்சமாச்சே! அதுக்கு வேறு பணத்தை இழக்கிறதோடே பொணத்தையும் அறுத்துப் போக்கி............லேசில் கொடுக்கமாட்டானே!"

6

“நேத்திக் கிந்நேரம் இப்படிப் போவான்னு ஒருத்தருக்கும் தெரியாது. இன்னிக்கு இந் நேரம் பிரேதமா போய் கொண்டு போயும் வச்சாச்சு. உம்.............இவ்வளவு தான் மனுஷ காயம்!...........”

“ஏண்டி! புத்தி கெட்டவ இப்படிப் போனாளே! பிசாசா அலையணுமாமே!”

“என்னமோ அப்படித்தான் சொல்லிக்கிறா! யார் கண்டது?”

“இப்போதாண்டி, ஒண்ணொண்ணா சங்கதி வெளியே வருது! இந்த செருக்கி தன் நாட்டாமையா ஆம்படையானுக்குக் கூடத் தெரியாமே தன் சங்கிலியை யாருக்கோ இரவல் கொடுத்தாளாம். அத்தாலே வந்த வினை தானாம் இதெல்லாம்.”

“நேத்தி குட்டி இவ! அதுக்குள்ள இந்த நாட்டாமை யெல்லாம் என்னத்துக்கு?”

“அதெல்லாம் இருக்காதடி! சும்மா கட்டுவார்த்தையா யிருக்கும்! உள்ள சங்கதி நாளாக நாளாகத்தான் தெரியும்.”

* * * *

இவ்வளவும் சந்தானத்து வீட்டு மாட்டுப் பெண் கிணற்றில் விழுந்து இறந்துபோக அதனால் எழுந்த ஊர் வம்பு.

---

## கட்டுரையாளர் கவனிக்க.

கட்டுரையாளர் தாங்கள் எழுதும் கதை கட்டுரைகளைப் புக்போஸ்டில் அனுப்பும்போது, ஸ்டாம்பைக் கவரின்மீது சரியாக ஒட்டி அனுப்பவேண்டும். தபால் அதிகாரிகள் கட்டுரைகளைப் பரிசோதிப்பதற்குச் சௌகரியமாக இருக்கும்படி கவரை ஒட்டவேண்டும். ‘ஆனந்த’னுக்கு வியாசம் அனுப்பும் நேயர்களில் பலர் கவரில் பாதியும் கட்டுரை யெழுதியுள்ள காகிதத்தின்மீது பாதியுமாக ஸ்டாம்பை யொட்டி அனுப்புகிறார்கள். மற்றுஞ் சிலர் கவரை மூடியும், அதன்மீது கயிற்றைக் கட்டியும் அனுப்புகிறார்கள். இது தற்போதைய தபாற் சட்டத்திற்கே விரோதமான தாகையால், மேற்குறித்த விதமாகவுள்ள கவர்களுக்கு இரட்டிப்பாகத் தபாற் கட்டணம் வாங்கிவிடுகிறார்கள். இதனால் நமக்கு கஷ்டமும் நஷ்டமும் ஏற்படுகிறது. இதையெல்லாம் கவனித்துக் கட்டுரையாளர் நடந்துகொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

பத்திராதிபர்.

# மதமும் மார்க்கமும்

(ம. ஆறுமுகம்.)

இப் பரந்த உலகம் பல மதங்களையும் மார்க்கங்களையும் கொண்டது. உலக மொத்த ஜனத்தொகை சுமார் இரு நூறு கோடியாகும். இவர்களுட் பலர் பற்பலவித மார்க்கங்களையும் மதங்களையும் அனுட்டித்து வருபவர். நம்மிந்திய நாட்டில் முக்கியமாக உலவும் மதங்கள் ஹிந்து மதம், முகமதிய மதம், கிறிஸ்தவ மதம், புத்த மதம் என்பன. ஒவ்வொருவனும் தன் தன் பிறவிப் பயனாய் ஒவ்வோர் மதத்தைச் சார்ந்திருக்கின்றான். தந்தை ஓர் ஹிந்துவென்றால் மகனும் அதே மதத்தையே சார்ந்திருக்கின்றான். இது பிறவிப் பயனாய் ஏற்பட்டது; இது உண்மை மார்க்கமாகாது. மதத்திற்கும் மார்க்கத்திற்குமுள்ள வித்தியாசம் வடதென் துருவங்களுக்குள்ள வித்தியாசத்தைப் போன்றது.

மதத்தையும் மார்க்கத்தையும் அறியாது புலர் திண்டாடுகின்றனர். படித்தவர்களும் அறிவாளிகளும்கூட அறிகிலர். இதன் தார தம்மியத்தை உணரக்கூடியவர்கள் ஞானிகளே.

பலர் மதத்தையும் மார்க்கத்தையும் அறியாமை காரணமாக அறிகிலர்; பலர் மார்க்கத்தையும் பலர் மதத்தையுமே யறியா துழல்கின்றனர். அனேகர் இவ்விரண்டிற்கும் வித்தியாசமுளதென்றே காணக்கூடாத நிலையிலிருக்கின்றனர். இந்நிலையில் யாதாமொன்றைத் தத்தமக்கு நேரிய வழியில் கடைப்பிடித்து வருகின்றனர். மத ஆசிரியர்கள் பற்பலவித கொள்கைகள் அபிப்பிராயங்களுடன் போதிப்பார்களே யொழிய, அவர்களது குறிக்கோள் மட்டும் இறைவனையே சாரும்.

நாகரிகம் தோன்றுமுன், மனிதர்கள் அநாகரிகம் காரணமாய், ஈசன் ஒருவன் உண்டு என்பதையே அறியாது கல்லையும், மண்ணையும், காற்றையும் கூற்றையும், சூரிய சந்திரர்களையும் வழிபட்டு வந்தனர். அக்காலை நாட்டில் அநாகரிகர்களும், ஞானப் பாலருந்தா மக்களு மிருந்ததனாலே அவைகளைப் போக்கி இறைவன் தமதருளைப் பிரகாசிக்கச் செய்ய வுன்னி உலகின் பல பாகங்களில் பற்பல உருவங்களுடன் தோன்றி ஆங்காங்குள்ள மக்களுக்கு அவ்வப்போது மார்க்க உபதேசம் செய்தாரே யன்றி ஒரு தனி மதத்தைப்பற்றி எந்த மத ஆசிரியரும் உபதேசித்ததில்லை. மக்கள் ஆங்காங்கு அவரது உபதேசங்களுக்குத் தக்கவாறும், தத்தம் கொள்கைகளுக்கொப்பவும், அவரைப் பின்பற்றி, ஒவ்வோர் மத குருவைப் பின்பற்றியவர்களும் அவ்விதம் பல பிரிவுகளாய்ப் பிரிந்து ஆங்காங்கு பல மதங்களென ஏற்படவே, இப்போது மனிதன் உலகின் பல பாகங்களிலும் சஞ்சாரம் செய்யத் தொடங்கவே மதங்கள் இடையூறாய் நிற்கின்றன. இதுபோன்றே ஆதியில் ஒன்றாயிருந்த ஜாதி மூன்றாகி எட்டாகி இப்போது நூற்றுக்கணக்கான ஜாதிகளையும் ஒவ்வொன்றிலும் பல உட்பிரிவுகளையும் காண்கின்றோம். எனவே, மதம் என்பது மார்க்க ஞானிகளும் அவர்களைப் பின்பற்றியவர்களும் தங்கள் பழக்க வழக்கங்கட்கும் கொள்கைகளுக்கும் தக்க-

வாறு அமைத்துக்கொண்ட ஓர் வேடமே தவிர வேறல்ல. மேலும், மத குருக்கள் ஆங்காங்கு தேவையானவைகளை மட்டும் போதிப்பார்களே யொழிய, கணக்குப் பாடம் வராத ஒருவனுக்கு ரசாயனம் படித்துக் கொடுக்கும் ஆசிரியரைப் போலிரார். இதை வைத்துக்கொண்டு மதத்தை வேறு படுத்தலாமா?

இன்று மகாத்மா காந்தி பம்பாயில் ஹிந்தியில் ஓர் சம்பவத்தைக் குறித்துச் சொற்பொழிவாற்றி யிருக்கலாம். சென்னையில் நாளை ஆங்கிலத்தில் வேறு காரியம்பற்றிப் பேசியிருக்கலாம். அங்குள்ளவர்கள் ஓர்வித அறிவை யடைந்திருப்பார்கள்; இங்குள்ளவர்கள் வேறொரு விஷயத்தை யறிந்திருப்பார்கள். இதனால் சென்னைவாசி தான் பார்த்தவர் தான் காந்தி யென்றும் அவரது சொற்பொழிவு (அங்கே) தான் சத்தியவாக்கென்றும், பம்பாய் வாசி சொல்வது தவறு என்றும் புறக்கணிக்க நீதியுண்டோ? எனவே, காந்தியும் காந்தீயமும் அவர் ஒருவரிடமே இருக்கின்றது. அதைப் பற்பல விடங்களில் பற்பல ஜனங்களிடையே பேசியதனால், அவர்கள் தாங்கள் கற்றதே கல்வி, பெற்றதே புலன், அதே உண்மை மதம் என்று கூறுவது கிணற்றுத் தவளையின் கர்வத்தையும் வீண் பெருமையையும் ஒக்கும். எனவே, மதம் வேறு; மார்க்கம் வேறு. ஆனால் இரண்டிற்கும் சிறிதே சம்பந்தமுண்டு.

மதம் பல பிரிவுகளைக் கொண்டு 'முடிவில் ஒன்று உண்டு' என்பதை மட்டும் காட்டி நிற்குமே யொழிய, அப் பரம்பொருளை யடைவதற்கான வழியில் நம்மை நிறுத்தாது. ஆனால் மார்க்கமோ பல பிரிவுகளைக் கொண்டாலும் இறைவனின் அம்சங்களைப் பிரித்துக் காட்டி உண்மைப் பொருளை வெளிப்படுத்தி நிற்கும். இன்று நாம் புராணங்களிலோ மற்றும் நூல்கள் வாயிலாகவோ பார்ப்போமே யானால் 'எந்த மத வைதேகியும், ஓர் உண்மை மார்க்கத்தை யனுட்டியாமல், முத்தி பெற்றிருக்க முடியாது' என்ற உண்மை தெள்ளிதிற் புலப்படும். மதம் மார்க்கத்தை யறிவுறுத்துமே யொழிய இறைவனைப் பிரத்தியட்ச மாக்காது; ஆத்மஞானம் பிரகாசிக்கச் செய்யாது. ஓர் ஊருக்குப் போக வேண்டுமென்று மூன்று இடங்களினின்றும் மூவர் புறப்பட்டு அதே இடத்தை நோக்கி ரயில்மூலம் வருவதாக வைத்துக் கொள்ளுவோம். மூவரும் அதை ரயில்மூலம் அடைகின்றனர். ரயிலை மதத்திற்கு ஒப்பிடுவோம்; தண்டவாளம் மார்க்கத்தை அறிவுறுத்தட்டும்; குறிப்பிட்ட இடம் குறிக்கப்பட்ட இறைவனாகட்டும். தண்டவாளமின்றி ரயிலில் பிரயாணம் செய்யவியலாது. ரயில் இல்லாவிடினும் நடந்து தண்டவாளப் பாதையை அனுசரித்துச் சென்றாவது சிறிது சிரமப்பட்டு குறிப்பிட்ட இடத்தை யடையலாம். அதே இல்லை யென்றால்? இப்போது விளங்குகிறதல்லவா?

இதைக் குறித்து சுவாமி விவேகானந்தரவர்கள் தமது 'சிகாகோ பிரசங்க'த்தில் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத் தக்கது. அதாவது:—'வெவ்வேறிடங்களிலே உற்பத்தியாகும் வெவ்வேறு நதிகளுக்கெல்லாம் சமுத்திரமே சங்கமஸ்தானமா யிருப்பதுபோல, அபிருசி பேதத்தால் ஜனங்கள் கைப்பற்றும் மார்க்கங்கள், நேராயும் கோணலாயும் வெவ்வேறு விதமாகக் காணப்படினும், அவைகளுக்கெல்லாம் ஈஸ்வரன் ஒருவனே ப்ராப்திஸ்தானமாய் விளங்குகின்றார்' என்பதாகும்.

எனவே மார்க்கத்தை யனுட்டித்து நம்மைப் புனிதப்படுத்துவது நாம் இறைவனைச் சமீபிப்பது போலாம். மார்க்கமின்றி மதமில்லை. மேலும் உலகத்தில் பிறந்த எல்லோரும் ஓரோர் மதத்தைச் சேர்ந்தவர்கள்தான். அங்ஙனமாயின் யாவரும் மார்க்க ஞானிகளா?

அன்றியும், மார்க்கத்தை யனுட்டிப்பதிலும் ஓர் புனிதமான வழியைக் கைக்கொள்ள வேண்டும். மார்க்கத்தினின்று சிறிது பிறழ்ந்தாலும் உண்மை நிலை மாறிவிடும். ரயில் தண்டவாளத்தினின்றும் வண்டி விலகினால் ரயில் என்ன பாடுபடும்? அதிலிருப்பவர்க்கென்ன ஏற்படும்? இதே போல மார்க்கர்களும் தம் நிலை மாறினால் தம்மையும் கெடுத்துக்கொள்வதன்றி, தம்மை யண்டியவர்களையும் கெடுத்துவிடுவர்.

கானகம் புகுந்து தவம் புரிவதும் ஓர் மார்க்கமேயாம். விசுவாமித்திரர் மேனகை யெனும் தேவமாதால் தவநிலை கெட்டுழன்றது இதிகாசங்களில் புலப்படுமே?

கிறிஸ்தவ மதத்துக்கும் மகமதிய (இஸ்லாம்) மதத்திற்கும் ஏதோ சில விஷயங்களில் ஒற்றுமை இருப்பதாகவும், அங்ஙனமே புத்த சமண மதங்களும் சம்பந்தம் கொண்டுள்ளன வென்றும் நம்மவர் சொல்வதுண்டு. அதன் ரகசியம் இதுதான். இரண்டு இடங்களினின்றும் இருவர் புறப்பட்டுச் சென்று, அப்புறம் ஒன்றாய்ச் சேர்ந்து தாங்கள் போய்ச் சேரவேண்டிய இடத்திற்குப் போகலாமல்லவா? கடைசியாகப் பார்த்தால் எல்லா மதத்திற்கும் பலவிதங்களில் ஒற்றுமை இருந்தே தீரும். பல உபநதிகள் சேர்ந்தொரு பெரு நதியாகிப் பாய்வதுண்டல்லவா? இதை யறியாது தன் பிறவிப் பயனாலோ, அல்லது அறியாமையாலோ கைப்பற்றும் மதமே மேலானது, உண்மையானது என்று இயம்புவது அசம்பாவிதம். உலகப் பற்று மிகுந்துள்ளவரே அங்ஙனம் இறுமாந்து கூறுவர். முக்திக்கும் உலகப்பற்றுக்குமுள்ள வித்தியாசம் நாம் மேலே காட்டியதைவிடப் பன் மடங்கு அதிக தூரமுள்ளது.

சிலர் ஓர் மதத்தைவிட்டு வேறொரு மதத்திற்குச் செல்கின்றனர். அதில் ஏதோ சௌகரிய மிருக்கின்றதென்று நினைக்கின்றனர் போலும்? சௌகரியம் என்றால் என்ன அர்த்தம்? அவனவன் சுய முயற்சி வேண்டும் போது அதில் சௌகரியமென்ற வார்த்தைக்கே இடமில்லையென நினைக்கின்றேன். மேலும் ஓர் மதத்தில் காணாத சௌகரியம் ஆத்மார்த்த விஷயமாக அடுத்த மதத்தில் என்ன இருக்கிறது? சீக்கிரமாக முக்தி பெற்றுவிடலாம் என்று எண்ணுகின்றனர் போலும். மதங்களில் கஷ்டம், கஷ்டமில்லையென்று எதுவும் கிடையாது. அஃதெல்லாம் நாமாகப் பாவித்துக் கொள்வதுதான்; அல்லது பாதிரிமார்கள், மத குருக்கள் முதலியவர்கள், யுத்தத்திற்கு ஆள் சேர்ப்பதுபோல், பாமர ஜனங்களை ஏமாற்றித் தத்தம் மதங்களிற் சேர்ப்பதற்காகச் செய்யும் ஓர்விதச் சூழ்ச்சியாகும். அவர்களே சரியாய் மார்க்கத்தை யறியாதிருக்கையில் மற்றவர்களுக் கெங்ஙனம் மார்க்கத்தை உபதேசிக்க வியலும்? ஒரு மதத்திலிருந்து வேறொரு மதத்திற்குச் செல்பவர்கள் பின் கண்டவைகளை யனுசரித்தே செல்வார்கள்:— (1) தங்களுக்கு உத்தியோகம், கௌரவம் கிடைக்குமென்ற எண்ணம், (2) பாதிரி

மார்களோ, குருக்களோ தங்களுக்கு உணவும், உடையும், கல்வியும் அளிப்பார்களென்ற எண்ணம்; (3) இன்பமான வாழ்க்கையைத் தம் வாழ்நாள் முழுதும் அனுபவிக்கலாம் என்ற ஆசை.

இம்மாதிரியான ஓர் ஜனத்தொழில் முக்கியமாகக் கிறிஸ்தவ மத சம்பந்தமாகவே காண்கின்றோம். முற்காலத்தில் வசித்திருந்த முகமதிய அரசர்களும் இவ்வாறே நடந்து வந்தனர். எவ்வெக் காலத்தில் எவ்வெவ்வரசாங்கம் நடைபெறுகிறதோ, அவ்வவ் வரசாங்கத்தின் இயல்புக்கிணைய மாறுவது குடிகளின் இயல்பன்றோ?

எம் மதத்தைச் சேர்ந்தாலென்ன? மார்க்கத்தை யறிந்தவர்களுக்கு மதமே தேவையில்லையே? "மதம் எங்கே முடிவடைகின்றதோ அங்கேதான் மார்க்கம் ஆரம்பமாகிறது" என்று ஸத்சங் மகாராஜ் கூறவில்லையா?

மேலும் ஒரு மதத்திலிருந்து இன்னொரு மதத்திற்குச் சென்று அதன் மூலம் முக்தி பெற்று விடலாம் என்பது சுத்த அபத்தம். அதைவிடத் தன் சுய முயற்சியால் தம் மதத்தின் மூலமே முக்தி பெறலாமே? இது எப்படி இருக்கிறதென்றால் மூக்கை நேராகத் தொடாது கழுத்தைச் சுற்றித் தொடுவது போலவும், குறிப்பிட்ட ஓரிடத்திற்கு நேரிய பாதையிற் செல்லாது வேறு வழியைத் தேடுவது போலவுமாம். மேலும், புதிதாக ஓர் மதத்திட் புகுந்தும் அம்மதக் கோட்பாடுகளை யுணராது தவிக்கின்றனர். இதுகாறும் மதத்தின் விவரங்களைப்பற்றி யறிந்தோம். இனி மார்க்க விவரங்களை யாராய்வோம்.

பல சமய உண்மைகளையும் அறிந்து, உண்மைப் பொருளை யுணர்ந்து, காம குரோத லோப மத மாச்சரியம் என்னும் பாசங்களினின்றும் விடுபட்டு, புலன்களை யடக்கி யாள்வதே உண்மையான மார்க்க நிலைக்கு அடிப்படையாம். இதைச் சேவித்துக்கொண்டே வந்தால் விருத்தியடைந்து, சரியான ஓர் பக்குவ மெய்தியவுடன் ஈசுர கடாட்சம் சித்தியாகும்; அதையும் கடந்துதான் ஈசுரதரிசனம்; எளிதன்று.

பகவான் இராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறுவதென்னை? "மானிட ஜன்மம் ஈசுர தரிசனத்துக்குச் சற்றே பொருந்தியதாய் இருக்கின்றதே! என் அன்பர் அதற்குப் பொருந்துவரோ" என்றார் அம் மகானுபாவர். இதன் பொருள் விளக்கம் யாதாமெனில், "ஒருவன் பிறவிமுதலே ஈசுர ஞானத்தில் உலவி வந்தாலே அவன் ஆயுளிறுதியில்தான் பகவத் தரிசனம் சித்தியாகும்படி அவ்வளவு சரியான காலத்தை அளித்திருக்கிறாரே! மனிதர் யாவரும் அதைப் பெறுதல் எங்ஙனம்?" என்பதாகும்.

எனவே, உண்மை மார்க்கத்தை யனுட்டிப்பவன் எந்த மதத்தையும் சேர்ந்திருக்கலாம். அவனது ஆத்மாதான் விழிப்படைய வேண்டும்! ஸ்ரீ இராமகிருஷ்ணர் மார்க்க ஞானிகளுள் சிறந்த ஞானி. மற்றவர்களுக்கு ஓர் வழிகாட்டியாக விளங்கினர். மகாத்மாவும் ஒரு வழியில் மார்க்கஞானியே! பட்டினத்தார், ரமண ரிஷிகள், விவேகானந்தர், ஸெயின்ட் ஸேவியர், கிறிஸ்துநாதர், நபிநாயகம் எவ்வளவோ உதாரண புருடர்கள் தாலாமே?

மார்க்கத்தை யனுட்டிப்பவன் உண்மையில் ஓர் பைத்தியக்காரன் போலவே இருப்பான். இவ்வுண்மையை ஸ்ரீ இராமகிருஷ்ணர் தெளிவு படுத்தினார். ஆத்மார்த்த ஞானத்தி லீடுபட்டு உடலுணர்ச்சி யற்றிருந்த தனாலேயே மற்றவர்கள் என்ன செய்தாலும், சொன்னாலும்—அடித்தாலும் கூட-ஒன்றும் தன்னை ஊறு செய்யவில்லை என்று கூறினார். சுவாமி விவேகானந்தர் ஸ்ரீ இராமகிருஷ்ணரது தொண்டைப் புண்ணிலிருந்து வந்த புழுக்களையும் சீழையும் ஏந்தி, மற்ற பக்தர்கள் ஆச்சரியத்துடன் திகைப்புற்று நோக்க, தாம் அதைத் தேவாமிர்தமென ஏற்றுக்கொண்டு, தம் குரு சேட்டருக்கு ஓர் உண்மைச் சீடனாகத் தொண்டு புரிந்தார். இதுவன்றோ உண்மை ஞானம்? உண்மை மார்க்கம்? நிர்வாணம் என்பதைத் தம் விரதமாகப் பூண்டொழுகுபவரே சன்மார்க்கர்களெனப்படுவர்.

எனவே, மார்க்க ஞானிகளுக்கு வரம்பொன்றும் கிடையாது. மத வைராக்கிய முள்ளவரிடமே உலகப்பற்றும் துஷ்ட குணங்களும் அதிகமிருக்கும். மார்க்க விவேகிகள் உலகப்பற்றைவிட்டுப் பரந்த இறைவனது அம்சங்களாக உலகில் சஞ்சரிப்பார்கள். அவர்கள் இவ்வுலகிலிருப்பதாகக் காணப்படினும் அவர்களது உடல் பொருள் ஆவி மூன்றையும் விடுத்து ஈசுர தியானத்தி லீடுபடுவார்கள். உலகத்திலுள்ள சராசரப் பொருட்களால் அவர்கட் கிடரொன்றும் நேராது. ஆகவே, நம் நாட்டிற் பெருகிவரும் சமயச்சண்டைகள் காட்டுத் தீபோற் பரவாமல், தீப்பற்றிய வீட்டில் தண்ணீர் வார்த்தாற்போன்று அணைந்துகொண்டே வருமாக! நாம் நன்மார்க்கத்தில்—சன்மார்க்கத்தில்—நின்று, நம்முடைய எண்ணங்களை ஈசுர தியானத்திற் செலுத்தி, முடிவில் பேரின்ப வெள்ளத்திடை நீந்திக் கரை சேர்ந்து அந்தமில் இன்பம் என்றும் உருகப் பெறுவோமாக!!

## பல்லைப் பற்றிய விதிகள்

நூலைப் பல்லால் கடித்து அறுக்கக்கூடாது. இது ஒரு கெட்ட பழக்கம். பல் நுனி பலவீனப்படும்; அதில் சிறு சிறு உடைவுகள் ஏற்பட்டு, பிற்காலத்தில் சொத்தை பிடிப்பதற்குக் கூட இது காரணமாகலாம்.

பல் பாக்குவெட்டி யல்ல. அதனால் பாக்கு முதலிய கொட்டைகளையும் மிகவும் கடினமான வித்துகளையும் கடிக்கக்கூடாது.

பற்பொடியினால் அல்லது பசையினால் ஒழுங்காகப் பல் தேய்த்து வந்தால், வாய் ஆரோக்கியமாக இருக்குமென்று நம்பி விடப்பட்டது. அதனால் பல்லைச் சுத்தமாக வைத்துக்கொள்ள மட்டும் இயலும்; வியாதி வராமல் தடுக்க முடியாது.

குழந்தையின் பாற் பற்கள் எப்படியும் விழுந்து விடுகிறவைகள் தானே என்று அவை விஷயத்தில் அலட்சியமாக இருக்கப்படாது. அலட்சியத்தால் வேதனையும் தேக வியாதியும் உண்டாகும். பின்னால் முளைக்கிற பற்கள் வெகு நெருக்கமாகவும் கோணலாகவும் இருக்கும்.

# ஜோதிபாய்

(நாகை-நா. முத்துக்குமாரசாமி.)

"என் உயிரினும் மேலாக உங்களைக் காதலிக்கிறேன்."

"உண்மையாகவா ?"

"ஆம். என் ஐயம்........"

"இல்லை. என் பொருளை விரும்பி அல்லவே?"

"அது யாருக்கு வேண்டும்?"

"பின் என் இயற்கை எழிலில் மீதுள்ள காதலா."

"ஊஉம்."

"பின்னர் எதை குறித்து."

"உங்கள் அன்பை எண்ணியே. அதைவிட வேறு எனக்கு வேண்டுவதும் ஒன்று உண்டோ ?"

"ஆகா, உன்னைப்போன்ற உண்மை அன்பை அறிந்த ஆரணங்கின் அன்பை பெற்ற நானே பாக்கியசாலி. கடவுள் நம்மை காப்பாற்றுவாராக."

மேற்கண்ட உரையாடல் குமாருக்கும் கமலாவுக்கும் இடையே இயற்கை இன்பம் நிறைந்த ஒருநாள் மாலை நடைபெற்றதாகும்.

குமார் நல்ல அறிவாளி. சிறிது கறுத்த நிறமுடையவனானாலும் அழகனல்ல என்று கூற முடியாது. செல்வத்தில் பிறந்த ஒரே மகன். மொழி வல்லுநன். அறிஞன். செல்வமும் சிறப்பும் அவனிடம் நிறைவுடன் விளங்கியது. அன்பும் அருளும் அவனிடம் அடைக்கலம் புகுந்திருந்தது என்று கூறலாம்.

கமலா காலத்திற்கேற்ற காரிகை. மாநிறம், நவநாகரிக உடை, அதற்கேற்ற உல்லாச நடை, பாதி பின்னி விடப்பெற்ற சடை; மற்றும் மின்மினிபோன்று ஒளிரும் காதணி, இவற்றுடன் "Cuticura"வும் "Snow"வும் பிறவும் சேர்ந்து அவளை அழகியென ஆண்கள் எண்ணச் செய்தது. புன்னகையுடன் கூடிய அவள் முகம் கண்டவர்களை பிரமிக்கும்படி ஆக்கும். இன்பத்தென்றல் போன்ற அவளுடைய சொற்கள் மக்களை மயங்கச் செய்யும். இவளை குமார் காதலித்ததும், செல்வனான குமாரை இவள் காதலிக்கச் செய்ததும் ஒரு வியப்பல்ல.

ஜோதிபாய் இயற்கை எழில் மிக்க பேரணங்கு. பெண்களிடை இயற்கையா யமைந்த நற்குணங்களனைத்தையும் அவளிடம் காணலாம். இக்காலத்துப் பெண்ணாக இருந்தும் பண்டைக்காலப் பழக்க வழக்கங்களைக் கடைபிடித்து வந்தாள். நவநாகரீக முறையை வெறுத்தாள். கடைக்கண் நோக்கு, தளுக்கு, குலுக்கு இவைகள் அவளிடம் காண இயலாது. ஆயின், அவளுடைய மதிபோன்ற முகத்தில் களங்கமாக ஒரு வடு இருந்தது.

அவள் ஏழையுமல்ல. செல்வியுமல்ல. அவள் அடிக்கடி குமாரை புகைவண்டி நிலயத்தில் காண்பாள். இவளுடைய அலுவல் நேரமும் குமாரின் அலுவல் நேரமும் அனேகமாக ஒத்திருந்தது. அவள் உள்ளன்புடன் குமாரை காதலித்தாள். ஆயின் நாணம் அவளுடைய நாவைக் கட்டிவிட்டது. கமலாவின் முன்னர் இவள் என் செய்ய இயலும்? ஆதலின், கடலிடை சிப்பியினுள் முத்து வளர்வதைப்போன்று இவளுடைய உள்ளத்தினுள் காதல் வளர்ந்து ஒளிர ஆரம்பித்தது.

* * * *

ஒருநாள் குமாரும் கமலாவும் இயற்கையின் இன்பங்களை இன்புற வேண்டி காரில் (Motor car) செல்லுங்கால் எதிர்பாராதவிதமாக ஓர் விபத்து ஏற்பட்டது. குமாருக்கு தலையில் பலத்த அடி. கமலா தற்செயலாய் தப்பினாள். குமார் பெருமருத்துவ நிலயத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டான். அங்கு பல மருத்துவ வல்லுநரின் பெருமுயற்சியின் பயனாக அவன் உயிரிழப்பதினின்றும் காப்பாற்றப் பெற்றான். கமலாவும் அன்று அவனுடன் இருந்தாள். ஜோதிபாயும் அவனுக்கு ஏற்பட்ட விபத்தை அறிந்து திடுக்கிட்டாள். ஆயின் அங்குச் சென்று பார்ப்பின், தனக்கு அவமானம் வந்து சேருமோ, பழிச்சொல் உண்டாகுமோ என அஞ்சினாள். ஆதலின் தனக்கு உடல் நலமில்லை என்று கூறி மருத்துவ நிலயம் சென்று குமாரை கவனித்து வந்தாள் ஒருவரு மறியாமல்.

சில நாட்கள் கழிந்தன. மருத்துவர் பரிசீலனைச் செய்து தலையில் ஏற்பட்ட காயம் குணமாயினும், அடியின் அதிர்ச்சியின் பயனாய் குமாருக்கு இனி கண் தெரியாது என்றும் வேறு ஒரு வழியும் இல்லையென்றும் கூறிவிட்டனர். கமலாவிற்கு இச் செய்தி ஆழ்ந்த துக்கத்தைக் கொடுத்தது. மற்றும் அவரை தான் இனி மணக்க முடியாதே என்றும் வருந்தினாள். நாளாக, நாளாக கமலாவும் வருவதை நிறுத்திவிட்டாள்.

மருத்துவர்கள் இனி என்றும் கண் தெரியாது என்ற முடிவுக்கு வந்தனர். மற்றும் குமார் நிலயத்திற்கு வந்து நாட்களும் அதிகம் ஆகிவிட்டது. நோயும் குணமாகி விட்டது. ஆதலின் விரைவில் குமாரை வெளியில் அனுப்ப முயன்றனர். ஆயின் குமாரைக் கவனிக்க நம்பிக்கையுள்ள ஆள் வேண்டியிருந்தது. ஜோதிபாயும் குமாரின் நிலையைக்கண்டு மிக வருந்தினாள். ஆயின் கமலா கைநழுவ விட்டுச் சென்றதைக் கண்டு களிப்புற்றாள். இனி குமார் அவளுடையவன் என்று எண்ணினாள். ஆதலின் குமாருக்கு பணிவிடை செய்ய அவள் முன் வந்தாள்.

காலமும் கடந்தது. குருடனாகிய தன்னிடம் இவ்வளவு அன்புடன் நடந்துகொள்ளும் அப் பெண்ணைப்பற்றி பற்பல எண்ணினான். "அவள் யார்? ஒருகால் கடவுளே அவனைக் காப்பாற்றத்தான் வந்துற்றனரோ" என எண்ணினான். முன் பின் இவன் அறியாத அப் பெண்ணின் பேரன்பைக் கண்டு வியந்தான். அவளின் அருகில் இருப்பதே அவனுக்கு இன்பம் அளிக்கும். அவளுடைய பேச்சில் அவனுக்கு மகிழ்வு பிறக்கும். அவளின் அறுசுவை உண்டியில் உயிர் உய்யும். இவ்வாறு அவ்விருவரின் வாழ்க்கை அன்பின் நிலையாக வளர்ந்து வந்தது.

இப்பொழுது குமாருக்கு அவனுடைய வீடு முழுவதும் ஜோதிபாய் துணையின்றியே சென்று வர முடியும். ஜோதிபாய்க்கும் அவன் எதை உண்ண விரும்புகிறான், என் தமிழ்ப்பாட்டுகளை விரும்புகிறான், எப்படி அவள் மீது அவன் அன்புடன் இருக்கிறான், என்று தெரியும்.

Dr. சொக்கலிங்கம் அப்பொழுதுதான் வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்தார். மருத்துவ பேரறிஞர் அவரின் மருத்துவ அறிவை எண்ணி வியந்தனர். அவரிடம் குமாரை காண்பித்தால் குண மடையலாம் என எண்ணி ஒருநாள் குமாரை அழைத்துச் செல்ல வந்திருந்தார் பழைய மருத்துவர்.

ஜோதிபாய்க்கு ஒருபுறம் மகிழ்ச்சியும் ஒருபுறம் துக்கமும் உண்டாயது. குமாருக்கு கண் தெரியும் என்றால் அது குமாரின் வாழ்க்கையை இன்புறச் செய்யும் என்று அவள் எண்ணி மகிழ்ந்தாள். ஆயின் குமாருக்கு கண் தெரிந்தால் தன்னை விரும்பமாட்டாரோ என்று ஐயப்பட்டு வருந்தினாள். மற்றும் கமலாவின் கடைக்கண் குமாரை ஆட்டி வைக்கும் என்றும் எண்ணினாள். இக் காலத்தில்தான் உண்மை மறைபட்டு பொய்மை மேலோங்கி நிற்கிறதே. வெளி தோற்றத்திலும் பொய்யுரைகளிலும் வஞ்சகர்களின் அன்பிலும் போலிகளின் பண்புகளிலும் தான் மக்களின் மனம் ஈடுபடுகிறதே ஒழிய, உண்மை அன்பிலும், இயற்கை தோற்றத்திலும், அறவுரைகளிலும் பெரியோரின் பேச்சுகளிலும் நம்பிக்கை அற்றவர்களாக இருக்கின்றனரே என் எண்ணினாள். ஆதலின் குமாருக்கு கண் தெரிவதென்றால் தன் வாழ்க்கை இருளடைவது என்று கண்டாள். ஆதலின் குமார் குருடராகவே இருக்க எண்ணினாள். பின்னர் ஐயோ, பாவம் குமார் குருடராய் என் வாழ்க்கையை மகிழ்விப்பதற்காக அவர் வாழ்நாள் வரையில் துன்புற வேண்டுமா? தன்னலத்திற்காக குமாரின் வாழ்க்கை வீணாவதா? இதுதான் என் உண்மை அன்பின் பயனா என எண்ணுவாள். அன்றி, குமார் கண் தெரிந்து இன்புறுவதும், தான் கன்னிகையாகவே வாழ்க்கையை துன்புற கழிப்பதும் அவசியமா என்று பற்பல எண்ணினாள். கடைசியில் தன்னலம் வீழ்ந்தது. அன்பு, ஒப்புரவு இவை வெற்றி கண்டன. குமாரின் நலமொன்றையே காண விழைந்தாள். குமாரின் வாழ்க்கை இன்புற்று விளங்க தன் வாழ்க்கையின் பலனையே விடுத்தாள் வீரமகள்.

குமாரையும் பேரறிஞர் Dr. சொக்கலிங்கம் பரிசீலனை செய்தார். குண மடையும் என எண்ணினார். இரண்டுநாள் முயற்சிக்குப் பிறகு இன்னும் இரண்டு நாட்களில் குமாருக்கு கண் தெரியும் என்றுக் கூறினார்.

ஜோதிபாய்க்கு குலை நடுங்கியது. குமாருக்கு கண் தெரியும் என்றதும் மகிழ்ச்சி ஏற்பட்டாலும் கமலாவை கண்டு களித்த அக்கண்கள் இவளை ஏற்குமா என அஞ்சினாள். ஆதலின், அன்று காலையே நகர் வெளியில் மறைந்து வாழ்ந்தாள்.

கண்கள் தெரியுமென்று அறிஞர் கூற கட்டுகள் அவிழ்க்கப்பெற்றன. குமாரும் களிப்புடன் தன் முன்னிருப்பவைகளைக் கண்டான். அவனின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. முதலில் ஜோதிபாயை காண விழைந்தது அவன் கண்கள். அழைத்தான் பதிலில்லை. பின்னர் அங்குள்ள நர்ஸுகள் பிற பெண்கள் அனைவரையும் ஜோதிபாய் என்று எண்ணிப் பேசுவான். ஆயின் அவர்களின் குரலைக் கண்டு அவளல்ல என அறிந்து ஏங்குவான்.

ஆயின் அனைவரின் பெருமுயற்சியின் பேரில் குமார் ஜோதிபாய் இருக்கு மிடமறிந்து அவளை அழைக்கச் சென்றான். வந்த குமாரைக் கண்டதும்,

"குமார்" என்றலறினாள்.

"ஜோதிபாய்" என்று ஆரணங்கை அன்புடன் ஆரத் தழுவினான் ஆணழகன்.

"என்ன, என்னைக் காதலிக்கிறீர்களா?"

"ஆம்."

"என் முகத்திலுள்ள வடு உங்களிடை வெறுப்பை உண்டாக்க வில்லையா?"

"ஆம். உன் உள்ளம் தூய்மை நிறைந்தது. மேலுள்ள இவ்வடு என்ன செய்யும்? சிப்பியினுள் முத்து போன்றது. நான் முத்தையே விரும்பு கிறேன். சிப்பி எப்படி இருந்தால் எனக்கென்ன?"

"உண்மையாகவா?"

"ஆம்."

அப்பொழுது குமாரைக் காண கமலா வந்தாள். "குமார், உன் நிலை யைக் கண்டு மனமுடைந்து அன்றையிலிருந்து எனக்கும் உடல் நலமில்லை. இன்று உனக்கு குணமாய்த்து என்று அறிந்தேன். உடன் வந்தேன் உன்னைக் காண. எனக்கு அச் செய்தி எவ்வளவு மகிழ்ச்சியை அளித்தது உனக்குத் தெரியுமா?" என்றாள் எப்பொழுதும் போல் தென்றல்தேன் மொழியில்.

"ஆம். அதையும் விட மகிழ்ச்சியை அளிக்கும் செய்தியை நீ அறி வாயா?"

"என்ன......"

"ஜோதிபாய்க்கும் எனக்கும் திருமணம்:"

"என்ன விளையாடுகிறீர்களா? என்ன இவளையா, இக் குரூபியையா, பட்டிக்காட்டையா?.................."

"ஆம். அவளையே. அவளே என் உயிர். என் கண்மணி. சுரியினுள் வைரம். மண்ணிடை மாசற்ற பொன். சிப்பியிடை முத்து. முள் நிறைந்த பலாவிடை சுவை நிறைந்த சுளை. அவை போன்று செயற்கை அழகற்ற அவள் உள்ளம் தூய்மையானது. மாசற்றது. அன்பின் உறைவிடம். அழ கிய நல்ல பாம்பினுள் நஞ்சு போன்றதன்று அவள் நெஞ்சு. அகத்தே கருத்து புறத்தே வெளுத்த உள்ளம் உடையவள் அவளல்ல" என்று கூறி ஜோதி பாயை அன்புச்சுடர் ஒளிர பார்த்தான். அவ்வமயம் இரு பெண்களின் கண்களினின்றும் நீர் மல்கிற்று. ஒன்று மகிழ்ச்சியின் நெகிழ்ச்சி. மற் றொன்று இகழ்ச்சியின் நெகிழ்ச்சி.

---

# நமது தாய்மொழி

(கோட்டாறு-வே. கணேசன்.)

"மறைமுதல் கிளந்த வாயான், மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி இலக்கணம் செய்யப் பெற்றே,
அறைகடல் வரைப்பிற் பாடை அனைத்தும் வென்று ஆரியத்தோடு
உறழ்தரு தமிழ்த் தெய்வத்தை உண்ணினைந் தேத்தல் செய்வாம்."

(சீகாளத்திப் புராணம்.)

அமிழ்தினு மினிய தமிழ் மொழியாம் நம் தாய் மொழியின் சீரினை விளக்கித் தற்கால நிலைமையில் நாம் நம் தாய்மொழிக்குச் செய்ய வேண்டியன யாவை என்பதைச் சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் முழு நோக்கமாகும். கலைப்பெருக்கம், சொற்பெருக்கம், இலக்கியத் தொன்மை எனும் இவற்றை நோக்கின், தமிழ் மொழியே திராவிட மொழியினத்தில் தலைசிறந்த மொழி யென்பது ஆன்றோர் முடிபு. ஆதிகாலந் தொட்டே திராவிட மக்களின் தாய் மொழியாகத் தமிழ் இருந்து வருகிறது. பிற மொழிகள் தோன்றுவதற்கு முன்பே பல அரிய நூற்களைப் பெற்றுப் பூரணத் தன்மையை அடைந்திருந்த தனிப் பெருமையைத் தமிழினிடந்தான் காண்கிறோம்.

"சதுர்மறை ஆரியம் வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழி நீ அநாதியென மொழிவதுவும் வியப்பாமே!"

என்று மனோன்மணீயம் ஆசிரியர் தமிழைப் புகழ்ந்திருத்தல் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

முதற்கண் தமிழ் என்னுஞ் சொல்லிற்குப் பொருள் காண்டல் அவசியம். அறிஞர்கள் பலர் பல பொருட்களைத் தந்துள்ளனர். "இனிமையும், நீர்மையும் தமிழெனலாகும்" எனப் பிங்கலந்தையார் கூறியதற் கொப்பத் தமிழ், இனிமை, நீர்மை எனும் பொருட்களைத் தந்து நிற்கின்றது. "தமிழ் சிவம், இனிமை யெனும் தனிப்பொருளாம்" எனப் பேரிசைச் சூத்திரம் கூறுவதற் கொப்ப, தமிழ், இனிமை, சிவம் எனப் பொருள் படுகின்றது. மேலும்; தமிழ் என்பது 'தமி' என்னும் பகுதியடியாகப் பிறந்த சொல் என்றும் 'தமி' என்றால் 'தனிமை' 'ஒப்பின்மை' என்று பொருள் படுமாகையால் 'தமிழ்' என்பது தனித்த, ஒப்பில்லாத பாஷை யெனப் பொருள் படுமென்றும் சிலர், பொருள் காண்கின்றனர். இங்ஙனம் 'தமிழ்' என்ற நம் மொழிப் பெயரே, பல விரிவான பொருட்களைத் தந்து நிற்றலே அதன் சிறப்பினைத் தெள்ளிதின் விளக்குகின்றது. அன்றியும், 'தமிழ்' என்ற சொல் வேறு மொழிகளுக்கில்லாத தனிச் சிறப்பெழுத்தாகிய 'ழ'கரத்தை மொழிப் பெயருடன் கொண்டு நிற்றலும், வல்லினம், மெல்லினம், இடையினம் என்னும் இனவெழுத்துச் சிறப்பு எனக்கே உரியதாகும்' என்று பிறமொழிகளுக்கு எடுத்துக் காட்டு முகத்தான் முறையே த,மி,ழ் என்ற மூன்று இனவெழுத்துக்களையும் தன்னகத்தே கொண்டு இலங்கி நிற்றலும், மொழிப் பெயரின் சீரினை நோக்கப் புகுவார் நோக்கற்பாலதாகும்.

நம் தாய்மொழி, பாரிடத்தனைவரும் ஓரிடத்திருக்கையில், மனிதர் தங்கள் கருத்தை ஒருவருக்கொருவர் தெரிவித்துய்ய, குறிஞ்சி நாட்டில் நிலவிய மக்கள் பால் உலவிய மொழி. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐவேறுருவிற் செய்வினை முற்றிய மொழி. திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த குமரவேளும், சந்தனப் பொதிகைச் செந்தமிழ் முனியும், ஐந்திரம் அளித்த இந்திரவேளும், ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியனும், இறையனார் அகப்பொருள் இயற்றிய இறைவரும், தமிழ்மறை ஓதிய வள்ளுவனாரும், சிலம்பு நலமுரைத்த புலம்பெறு இளங்கோவும், கல்விக் கவிஞன் கம்பநாடனும், வெண்பா வல்ல புகழேந்திப் புலவரும், ஒத்து புகளுடை கூத்தப் புலவரும், முடிக்கச் சிறந்து நடிக்கும் நங்கையாவாள். இத்தகைச் சிறப்பு வாய்ந்த தமிழின் சுவைத்திறம் வியந்து குமரகுருபரர் மீனாட்சியம்மையாரை "மறைபழுத்த துறைத்தீந் தமிழின் ஒழுகு நறுஞ்சுவையே" என்று அழைத்திருத்தல் இவண் ஊன்றிக் கவனிக்கத்தக்கது. நம் தமிழ்மொழி தன் தூய்மை நலங்கெட விடுவதில்லை. பிறமொழிச் சொற்களை ஏற்றுக்கொள்ளுதல் என்பது அரிதினும் அரிது. தமிழ்மொழி மிகுந்த தெய்வத் தன்மை வாய்ந்த மொழியாகும். கலைமகள் தன் விழிகள் ஒத்திடு தமிழணங்கு பொய்யுரைப்போர் புன்னுவில் பொருந்திய திட்டினை அன்று தீக்குளித்து ஓட்டினள். வேற்றுமொழி வந்து தன்னைத் தீண்டுதலால் மேனியினைக் கழீஇக் கொள்வதற்காக அன்று வைகை ஆற்றெதிரே ஏட்டின் மிசை நீந்தினள். யாழினும், குழலினும், பாலினும், தேனினும், காணினும், கேட்பினும், கருதினும் நமது அருந்தமிழ் மொழி இனிக்கும்.

நம் தமிழணங்கின் இன்சுவைத் திறனை,

"கனியிடை ஏறிய சுளையும்—முற்றல்
கழையிடை ஏறிய சாறும்,
பனிமலர் ஏறிய தேனும்—காய்ச்சுப்
பாகிடை ஏறிய ருசியும்,
நனிபசு பொழியும் பாலும்—தென்னை
நல்கிய குளிரிள நீரும்,
இனியன என்பேன் எனினும்—தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்!"

என்று, தற்காலக் கவியாகிய பாரதிதாஸன் உளமுருகிப் பாடியுள்ளார். மேலும் அவர்,

"பொழிலிடை வண்டின் ஒலியும்—ஓடைப்
புனலிடை வாய்க்கும் கலியும்,
குழலிடை வாய்க்கும் இசையும்,—வீணை
கொட்டிடும் அமுதப் பண்ணும்
குழவிகள் மழலைப் பேச்சும்—பெண்கள்
கொஞ்சிடும் இதழின் வாய்ப்பும்,

விழைகுவ னேனும், தமிழும்—நானும்
மெய்யாய் உடலுயிர் கண்டீர்!"

என்று புகழ்ந்து பாடி யிருத்தலும் தமிழின் அமிழ்தினுமினிய தன்மையை விளக்குகின்றது. வீரக் கவிஞர் பாரதியாரும் "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவ தெங்கும் காணோம்" என்றும்,

"உலகிலுள மொழியனைத்தும் உயர்ந்ததமிழ்
மொழியெழுத்தால் ஓங்குமென்றும்
பலபொருளைச் சிலசொல்லிற் பகர்ந்திடுதல்
தமிழ்மொழிக்கே பான்மை............"

என்றும் புகழ்ந்திருத்தல் தமிழ்த் தாயின் குன்றாச் சீரினை நன்றாய் விளக்குகின்றது. நமது தமிழ் அணங்கு, மூவேந்தர் தாலாட்ட முச் சங்கத்தேறிடந்து, பாவேந்தர் செங்காவில் நடை பழகி, மொழி பயின்று, வேங்கடமும், குமரியும் எல்லையாக் கொண்ட தமிழுலகில் நிலவுகின்றாள். புறப்பொருள், அகப்பொருள், சிறப்புடைய இலக்கணச் செறிவு, இயல், இசை, நாடகம் எனும் இவை இலங்கும் சங்கத் தமிழதனில் இதன் பெருமை கையகத்துக் கனியென்னக் காணவரும்.

இனி, நமது தாய்மொழி வளர்ச்சிக்குரிய வழிகளைச் சிறிதாராய்வாம். பலவகையில் தமிழொளியை வெளிப்படுத்தி உலகமெங்கும் பாக்கச் செய்தல் வேண்டும். பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரத்தைத் தமிழ்மொழியிற் பெயர்த்தல்வேண்டும். இறவாத புகழுடைய புது நூற்களைத் தமிழ்மொழியில் இயற்றல்வேண்டும். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்தல் வேண்டும். தமிழ் ஒளியை மதங்களிலே சாய்க்காதிருத்தல் வேண்டும். இலவச நூற்கழகங்கள் எவ்விடத்தும் அமைத்து தமிழதனை வளர்ந்தோங்கச் செய்தல் வேண்டும். செந்தமிழ்ப் பத்திரிகைகள் பல தோன்றித் தமிழ் நலங்கெடாது காத்தல்வேண்டும். ஆங்காங்கே மறைந்து கிடக்கும் தமிழ் வல்ல இளைஞர்களுக்கு ஊக்கம் தந்து தமிழ்த் தொண்டாற்றச் செய்தல் வேண்டும். எனின், தமிழ்த் தாய் இன்புடன் எழில் பெறுவதிலோர் ஐயமில்லை. அறிவினர் அகம் மகிழ்வுறச் செய்யும் தமிழ்த் தேவி தழைத்தோங்குக.



# பெண்ணின் மூட முன்னேற்றம்

(P. N. வைத்தியநாத சுவாமி, B. Sc.,)

அன்பின் மிக்க மிஸ். டி. எம். குமாரி,

உன் கடிதம் கண்டேன். சகலமும் தெரிந்தது. மிகவும் சந்தோஷம். "நாங்களெல்லாம் சீர்திருத்தம் செய்து வருகிறோம்; மாதரின் மடமை அழிந்து வருகிறது; பெண்ணினம் போற்றப்படப் போகிறது..." என்றெல்லாம் நீ எழுதியிருப்பதைப் பார்த்தால் எனக்கு நிஜமாகவே சிரிப்பு வருகிறது. மூட முன்னேற்றத்தில் மூழ்குகிறீர்கள்போலும்! துக்கமும் பொங்குகிறது.

என் குமாரி! அன்று நாமிருவரும் "சூஜ்மால் வில்லுபாய்" கடைக்குப் போனோம்; உன் சுற்றைக்கல் மூக்குத்தியைக் கொடுத்து விட்டு அந்த ஐந்து கல் பேஸ்த்திரி வாங்கினோம். என் கையாலேயே உன் மூக்கில் போட்டேன்; அப்பொழுது உன் முகம் எப்படி இருந்தது தெரியுமா! அழகு வீசியது. உன் முகத்தில் சொட்டிய ஜீவ க்களையை நான் அறிவேன்; உலகத்திற்கு தெரியும். பயித்தியம் பிடித்த குமாரி! இப்பொழுது வீரப் பேச்சு எழுதியிருக்கிறாய்; 'பெண்கள் மூக்குத்திப் போட்டுக் கொள்வது மூடப் பழக்கம்; இல்லையானால் ஏன் ஆண்களும் அதை அணியக் கூடாது' என்று கேட்கிறாய்! குமாரி! இங்கு உன் மடமை உச்ச நிலையை யடைகிறது. வேறு நான் என்ன சொல்ல முடியும்! நீ மூக்குத்தியை எடுத்து விட்டாய்; உன் சங்கத்தை சேர்ந்தவர்களும் அதை அகற்றி விட்டனர்;-ஆகா! எவ்வளவு பெரிய மகத்தான முன்னேற்றம்! வெட்கம்!!..........

கணீர்! கணீர்!! என்று மெட்டி சப்திக்க பெண்ணரசிகளாக நடந்தீர்கள். ஆனால் இப்பொழுது அது புளித்து விட்டது. கிரீச்! கிரீச்!! என்று பலவண்ணமான பாதரக்ஷைகள் போட்டு நடக்கிறீர்கள். என் பிரிய குமாரி! இது தானா முன்னேற்றம்! கேவலம் நாங்கள் அன்னிய நாட்டினரிடமிருந்து "காபி" அடித்தோம்; அந்த எச்சலை நீங்களும் வெட்கமில்லாமல் பங்கிட்டுக் கொள்கிறீர்கள்.

"சைக்கல்" விட்டு வரவேண்டும்; "மோட்டார்" ஓட்ட வேண்டும்; ஆண்களை விட அதிகமாக என்கிறாய்—இதிலெல்லாம் என்ன முன்னேற்றமிருக்கிறது! எங்கள் தொழிலில் நீங்கள் பங்கு கொள்கிறீர்கள். பேதை மகளே! அவ்வளவு தானே என்பதை உணர்!

உடலை வளர்க்க வேண்டுமென்கிறாய். இது முற்றிலும் அவசியம். பெண்களும் தேகாப்பியாசம் செய்ய வேண்டும். ஆனால் நீயோ நல்ல பயில்வான்களைப் போல் உடம்பைக் கட்ட வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டு எழுதுகிறாய். இது மிகவும் விசனிக்கத் தக்கதாகும். ஆண்கள் செய்யும் அனேகம் குறிப்பிட்ட அப்பியாசங்களைப் பெண்களாகிய நீங்கள் பின்பற்றக் கூடாது. இது எவ்விதத்திலும் முன்னேற்றமல்ல; வீணாக உங்கள் வாழ்வை பாதிக்கும். பெண்மையிலோர் மென்மை; இதிலோர் இனிமை; இதை யெல்லாம் யோசித்தறிந்தே இறைவன் சிருஷ்டித்துள்ளான். குமாரி, உனக்கு ஞாபக மிருக்கு மென்றே நம்புகிறேன். அன்று நாம் கடற்கரையில் அரைமணி நேரம் உலாவி வந்தோம்; கால்கள் வலிக்கிற தென்றாய். அது சமயம் தினமும் செய்யும்படி சில அப்பியாசங்கள் காட்டினேனல்லவா? அவைகளை மாத்திரம் பழகி வந்தால் போதுமானது. பயித்தியக்கார முன்னேற்றத்தால் பாழ் படாதே!

ஒரு விஷயத்தில் வேண்டுமானால் விட்டுக் கொடுக்கலாம். பிள்ளைகளைப் பத்து மாதம் சுமந்து பெறும் தாய்கள் நீங்கள். ஆகையால் பள்ளிக்கூட உபாத்தியாயினியாக வேண்டுமானால் போகலாம். ஆனால் எத்தனை தாய்மார்கள் உபாத்தியாயினியாகப் போகிறார்கள். உன்னைப்போன்ற 'மிஸ்'களே அநேகம் அவ் வேலையில் இருக்கின்றனர். ஐயோ! உன் சாந்த குணத்தையும் உங்கள் "மிஸ்" மார்களின் பெருமையையும் நான் அறிவேன். இன்னும் சில இடங்களிலும் நீங்கள் முன்னுக்கு வரலாம். உதாரணமாக வைத்திய சாலைகளி லிருக்கும் தாதிமார்களைச் சொல்வேன். ஆனால் பொதுப்படையாக உங்கள் பொய்யான முன்னேற்றத்தை வெறுக்க வேண்டும்.

இன்னொரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிடுகிறாய். அது என் கண்களில் திராவகத்தைக் கொட்டுகிறது. அன்னியநாட்டுப் பெண்களை நீங்கள் பின்பற்ற வேண்டிய இடங்கள் இல்லாமலில்லை; ஆனால் என் குமாரி! நீ சொல்வதோ.........வேண்டாம்; பாரதநாட்டு பெண்மணிகட்கு பொருந்தாது. குமாரி! மறந்து போயிருக்க மாட்டாய் என்றே நம்புகிறேன். அன்று நாமிருவரும் மிஸ். வி. ஜெ. பாய் வீட்டிற்கு விருந்துக்குப் போயிருந்தோம்; அவள் புது வித கதம்பம் வாங்கி வைத்திருந்தாள்; வேடிக்கையாக மடித்து உன் தலையில் சூடினேன்; ஆனால் அது சமயம் பெண்களின் கூந்தலைப் பற்றியும் மிஸ் பாய் பேசினாள். அவைகளை இப்பொழுது யோசி. வெள்ளை மாதர்களைப்போல் நீட்டுக்கிராப் செய்துக் கொள்வது முன்னேற்றமல்ல; கேவல 'காபி'யாகும். இதே போல் தான் மற்ற விஷயங்களும் மிக ஆபாசமான "இமிடேஷன்" கள் என்பதை சத்திய வாக்காகக்கொள்.

மாதர் சங்கம் கண்டு விட்டதால் பெரிதும் முன்னேறி விட்டதாக ஜம்பம் பேசாதே. எத்தனையோ சங்கங்கள் ஏற்படுத்தி பார்த்து விட்டோம்; எங்கள் நிலை உயரவில்லை. இந் நிலையில் ஏதோ ஒரு தினத்தில் பெண்கள் பலர் கூடி விட்டால் உலகமே உயர்ந்து விட்டதாகக் கருதக் கூடாது. நமது—"மாதர் சங்க"த்தின் விஷயங்களை நாமிருவரும் நேரில் பார்த்திருக்கிறோ மல்லவா! அங்கு கூடி வம்பு பேசுகிறீர்கள். எல்லாவற்றையும்விட இதுவும் எங்களைப் பார்த்து அடித்த காபியே.

என் பிரிய குமாரி! சிறிது காலம் வேண்டுமானால் ஓய்வு எடுத்துக் கொள். பிறகு ஆழ்ந்து யோசனை செய். இன்று இந்தியாவின் நிலையென்ன? இதிலுள்ள பெண்கள் !கதி யென்ன! வீரமணிகள் வாழ்ந்த நாடு; உலகம் போற்றும் உத்தமிகள் வாழ்ந்த தேசம்; இன்று அயலார் கண்டு கேலி செய்கின்றனர்! ஏன்! புத்தகமும் எழுதி நம்மையே படிக்கும்படி கத்தையாக அனுப்புகின்றனர். இதற்கெல்லாம் பரிகாரம் தேடு. இந்தியத் தாயின் கண்கள் பிரகாசிக்கட்டும்; இந்திய மகளிர் உண்மை நிலையை உலகம் என்றும் அறியட்டும். எல்லாவற்றையும் விட அன்னையை கவனி. அவள் கால்களிலும் கைகளிலும் பிணிக்கப்பட்டிருக்கும் கனத்த சங்கிலிகளைப் பார். தலை துனி, கண்ணீர் விடு, தீராவேட்கத்துடன் திரிந்து வா! இன்னும் எவ்வளவு காலம் தான் உன்னைப் பெற்ற அன்னை அதை சுமப்பது என்பதை முடிவு செய்.

உன் பெற்றோர்கட்கு என் வந்தனம். உன் தம்பிக்கு இக் கடிதத்துடனிருக்கும் படம் பரிசாகும்.

—ஜெயபாலன்.

# நாட்டுப்புறமும் அதன் சீர்திருத்தமும்

(முருகவடிவு.)

ஒரு நாட்டின் வாழ்வு நாட்டுப்புறங்களின் வாழ்வைப் பற்றியே நிற்கின்றதென்பதைப் பல காலமாக அறிஞர் கூறி வருகின்றனர். நாடு நலமுற வேண்டுமானால் அதன் சுற்றுப்புறங்களெல்லாம் செழிப்பாக இருந்தால் தான் முடியும். கிராமங்களென நாமழைக்கும் நாட்டுப்புறங்கள் தாம் தேசத்தின் உயிர் நாடி. ஒரு நாடு நலமாக வாழ்கின்றதென்றால்; அந் நாட்டிலுள்ளார் அனைவரும் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தையும் பெற்று, கவலையின்றி ஒற்றுமையாக வாழ்ந்து வருகின்றார்கள் என்பது பொருளாகும் அன்றோ!

இன்றைய நிலைமையில் நம் தேசத்திலுள்ள 70 லக்ஷம் கிராமங்களும், பரம ஏழைகளாகிய இந்தியர்களாகவே தோற்றுவிக்கப் பட்டவைகள் போல் இருக்கின்றன. நாம் தக்க சமயத்தில் அவைகளைக் காக்காவிடில் நாமும் துக்ககரமாக வீழ்ச்சி யடைவோம் என்பதில் தினையளவும் ஐயமில்லை. மகாத்மா காந்தி யவர்களும் ஏனைய தொண்டுகளை விட நாட்டுப்புறங்களின் நலத்தையே குறிக்கொண்டு வார்தாவில் வாழ்ந்து வருகின்றார்.

நடந்த 180 ஆண்டுகட்கு முன் நடந்த சரித்திரத்தைப் பார்ப்போமானால்; அந்தக் காலம் நாட்டுப் புறங்கள் பன்னலங்களிலும் சிறந்து விளங்கியதைக் காணலாம். ஆனால் நம்முடைய தவக்குறைவால் கி. பி 1857-ம் ஆண்டிற்குப் பின் நாட்டுப்புறம் நலியத் தொடங்கியது. உலகத்தைக் காக்கும் திறன்கொண்ட நமது கிராமங்கள் அழிவை நோக்கி மிக வேகமாக விரைந்து சென்று கொண்டிருந்தன. திடீரென்று தோன்றிய அறிவாளிகளின் முயற்சியால் அழிவுப்பாதை சிறிது சிறிதாக அழிக்கப்பட்டு வருகின்றது.

பல்வளமும் நிறைந்து சீரும் சிறப்பும் எய்தியிருந்த நம்முடைய நாட்டுப்புறங்கள் ஏன் நாசத்தை நாடிச் சென்றன? அதனை எவ்வாறு சீர்திருத்தம் செய்ய முடியுமென்று ஆராயின், உண்மை புலப்படும்.

உண்மையாக இயற்கையோடிசைந்த இன்ப வாழ்வை இனிய முறையில் நாட்டுப்புற மக்களால் தான் நடத்த இயலும். வாழ்க்கையில் மகிழ்ச்சி ஏற்படும் காலம்; மக்கள் நன்னெறி நின்று பன்னலமும் உடையவராய்த் திகழும் காலமே என்பது தெளிவாம். ஆனால் நம் கிராமங்கள் கவலையே உருவோடு கல்வியில்லா அறிவோடு வறுமையே உடைமையாகக் கொண்டு விளங்குகின்றன. வயிற்றுக்கு ஒரு வேளை கஞ்சி அகப்படாத ஏழை மக்கள் ஆயிரக் கணக்கில் அலைகின்றார்கள். இவைகளை யெல்லாம் ஒருவன் கூர்ந்து நோக்கின் நெஞ்சம் குமுறும். எழுதவும் கை வராது. பேசவும் நா எழாது.

ஆகவே, காலச்சுழலில் உள்ள நம் நாட்டுப்புறங்கள் எந்த நிலையில் இருந்தால் சீர்திருத்தம் அடைய முடியும்? என்று கவனிக்கின், கல்வி, செல்வம், சுகாதாரம், விவசாயம், கைத்தொழில், வாணிபம், ஒற்றுமை

முதலியன கிராமங்களில் பல்கி யிருத்தல் வேண்டும். முதலாவதாக தற்கால நாட்டுப்புறக் கல்வியைப் பற்றி அறிந்து கொள்வது நலம்.

தற்போது "நாட்டுப்புறங்களின் கல்விக்கு நாட்டாண்மைக் கழகத்தார் அடிப்படை போட்டு வருகின்றார்கள். பல மாறுதல்களுக் கிடையே, நாட்டின் கல்வி முறையும் பல மாறுதல்களுக்கு ஆளாகி வருகின்றது. மாறுதல்கள் எவ்வாறாயினும் நித்தல் நிகழ்ச்சி யாகிய குடி வாழ்க்கைக்கு முற்றும் பொருந்திய தொன்றாக கல்வி முறை இருத்தல் இன்றியமையாதது. மக்கள் வாழ்க்கைக்கு, உடம்பிற்குக் கண் போன்று உதவக் கூடியது கலைத்துறையேயாகும். கம்பரும், கல்வியை "பொருந்து கல்வி" என்பர். நாட்டுப் புறங்களில் பயிலும் கல்வி முற்றும் தொடக்கக் கல்வியே யாகும். எழுதப் படிக்கக் கணக்குப் பார்க்கக் கற்றுக் கொள்வதாகி தொடக்கக் கல்வி யானே, அதில் பயில்வோர் தங்கள் வாழ்க்கை நிலைக்குரிய பல்வகை யறிவுகளையும் பெற வேண்டியோர் ஆவர்.

கிராமச் சிறுவர்களை, பிழைப்புப் பற்றிய வேளாண்மைத் தொழில் அவர்களை ஐந்து வயது வருவதற்கு முன்னும் தொடரும். அல்லும் பகலும் அகலாது மேவும். வாழ்நாள் முற்றும் வரும். அவர்கள் தொடர்பாக நான்கு ஆண்டுகள் படிப்பதோ அரியதினும் அரியதாகும். இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளே அவர்களுக்குப் பள்ளிக் கூடத்தில் படிக்கும் காலம் உண்டாகும். எனவே, இச் சிற்றெல்லையினுள்ளே அறிதற்குரியன பலவற்றையும் அறிய வேண்டுவார் மாணவர்களாகிய அச் சிறுவர்களே.

ஆதலின், அவர்கட்கு இயற்கையோடு ஒன்றுபட்ட, வாழ்க்கையோடு இயைபுள்ள, பொது அறிவுக் கல்வியை கிராம ஆசிரியர்கள் புகட்ட முன்வரவேண்டும். கிராமத்தைப் பற்றிய பல விஷயங்களையும் மாணவர்கள் தெரிந்து வைத்திருத்தல் அவசியமாகும். கிராமத்தைச் சுற்றியுள்ள ஊர்கள், தன் கிராமத்தின் எல்லை, பரிபாலனம் செய்யும் முறை, நஞ்சை புஞ்சை நிலங்களின் வரி, மற்றைய வரிகள், கடிதம் எழுதும் முறை, பத்திரம் எழுதும் முறை, முதலியனவற்றை அவர்கட்கு அச் சிறிய கால அளவிலேயே கற்றுக் கொடுத்தல் வேண்டும்.

மற்றும், கல்வியின் முன்னேற்றத்திற்கு வாசக சாலைகளும், பல்வேறு இடங்களில் நடக்கும் பலவற்றையும் அறிதற்கு பத்திரிகைகளும், ஒற்றுமைச் சங்கங்களும், ஏற்பட வேண்டியது மிகவும் முக்கியம். நாட்டு மக்கள் அடிக்கடி கிராமங்கட்குச் சென்று அரிய சொற்பொழிவுகள் ஆற்றல் வேண்டும். நாட்டு மக்களோடு—நெருங்கிய தொடர்பு கிராம மக்களுக்கு ஏற்பட வேண்டும்.

இரண்டாவதாக, உலகம் வளமையுற பல தொழில்கள் அவசியம். அவற்றுள் தலை சிறந்தது விவசாயம். விவசாயத்தைப் பற்றி புகழ்ந்து கூறாத அறிஞர்களும், பாடாத புலவர் பெருமக்களும் இல்லை—என்றே சொல்லலாம். இவைகளைப் பார்த்தால், உழவுத் தொழிலும் அதன் தலைவனுமாகிய உழவனும் வாழ்ந்தால் தான் உலகத்திலுள்ள 200 கோடி மக்களும் வாழ முடியும். அவன் வீழ்ந்தால் அனைவரும் இறப்பது நிச்சயம் என்பது புலப்படும். ஆனால் சிற்சில சமயங்களில் மனிதர்களுடைய சுயநலம் உண்மையை

மறுத்து அதனுடன் போட்டியிடும். அல்லது அதனுடைய வளர்ச்சியில் அசிரத்தை உணர்ச்சியைக் காட்டும். துரதிருஷ்டமாக ஒரே காலத்தில் போட்டியும், அசிரத்தை உணர்ச்சியும் இப் பரத கண்டத்து உழவுத் தொழிலின் மீது சீறிப் பாய்ந்தன. ஆனால் இளமையும் ஆற்றலும் மிகுந்த இந்திய விவசாயத்தை அடியுடன் அழிக்க முடியவில்லை. எனினும் நம் நாட்டு விவசாயம் பலங் குன்றி வலிமையை யிழந்து விட்ட தென்பதில் ஐயமில்லை. கடன் சுமைக ளெல்லாம் விவசாயிகளின் தலையில் சுமத்தப்பட்டன. வரிகள் பல்கின. விவசாயிகள் தங்களுடைய தொழிலின் பயனால் தாங்களே வாழ வகையறியாது தவித்தனர். இந்த நிலைமையில் "நனைந்த ஆட்டிற்கு நரி உதவி புரிந்தது" போல, இயந்திரங்கள் நம் நாட்டில் காலடி யெடுத்து வைத்தன. உடலிலுள்ள இரத்தத்தைச் சுண்டவைத்து, எலும்பை உருக்கி, நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டும் கஞ்சிக்கும் வகையறியாத விவசாயிகள் நிலங்களை யெல்லாம் விட்டு விட்டு ஆலையை நோக்கி வேலையை நாடிச் சென்றனர்.

இவைகளால் அநேக ஆயிரம் ஏக்கர் நிலங்கள் தரிசாய்க் கிடக்க நேரிட்டது. பல ஏரிகளும், குளங்களும் தூர்க்கப்பட்டன. துன்பம் வந்த காலத்தில் தான் மனிதர்கள் தங்களுடைய அநீதியான செயல்களுக்காக வருந்துவார்கள்.

சென்ற 1914-ம் ஆண்டில் நடந்த மகா பயங்கரமான யுத்தத்தில், கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவிட்டு கோடிக்கணக்கான மக்களைக் கொல்ல, பீரங்கிகளையும், துப்பாக்கிகளையும் வெடி குண்டுகளையும் லக்ஷக் கணக்கில் செய்ய கோடிக் கணக்கில் மனிதர்கள் தேவையா யிருந்தனர். நான்கு வருடங்கள், உலகத்திலுள்ள உழவர்களிற் பெரும் பாலோர் போர்ப் பேய் பிடித்து அழி நடனம் ஆடினர்.

மேழி பிடித்த அவர்கள் கை பீரங்கியைப் பிடித்தது. விதைத்த அவர்கள் கை ஜனங்களை மாய்த்து வீதிகளிலே கொட்டை பரப்பியது. இரக்கமுள்ள காராளர்கள் போர் முகத்தில் சுட்டுத் தள்ளினர். கட்டிடங்களை தீக்கிரையாக்கினர். அம்மம்ம! எங்கு நோக்கினும் போர் அரக்கியின் அழி நடனம்.

காலம் என்பது கறங்கு போற் சுழன்று மேலது கீழா, கீழது மேலா மாற்றிடும் வன்மை யுடையதல்லவா? எந்தப் பொருளுக்கும் செய்கைக்கும், ஆதியும் அந்தமும் உண்டன்றோ? சண்டையும் ஒழிந்தது. சமுதாயத்தின் பைத்தியமும் தெளிந்தது. விதைக்கின்ற காலத்தில் யமனுக்கு விருந்திட்டு மகிழ்ந்திருந்து பின் அறுவடைக் காலத்தில் வயலுக்கு அரிவாளை எடுத்துக் கொண்டு வந்தால் அங்கே என்ன கிடைக்கும்? எங்கு நோக்கினும் வறுமை. மக்கள் மிடி என்னும் இடியால் அடியுண்டு வாடினர். பசி, பசி என்று மக்கள் கதறினர். கால் நடைகள் நின்ற இடத்திலேயே உணவில்லாமல் விழுந்து மடிந்தன. 1919-ம் வருடத்தில் ஜெர்மனியில் உணவில்லாமல் இறந்தவர் தொகை மாத்திரம் 2 லக்ஷத்துக்கு மேலிருக்கும் என்றால் உலகத்தின் நிலைமையை எண்ணிப் பார்க்கவும் நமக்குக் கற்பனைத்திறன் ஏற்படுமா?

விஞ்ஞானத்தின் வளர்ச்சியால் நாட்டுப்புறங்களை மறந்த சர்க்காரெல்லாம் இதற்குப் பிறகு கிராமங்களைக் கவனிக்க ஆரம்பித்தன. கொஞ்சம் கொஞ்சமாக மக்கள் உய்ய ஆரம்பித்தனர். ஆனால் இந்த நற்காலம் இந்தியாவைப் போன்றுள்ள நாடுகளுக்கு ஏனோ கிடைக்கவில்லை. திக்கற்ற நம்மைத் தெய்வந்தான் காப்பாற்ற வேண்டும். முயற்சி செய்ய வேண்டியது நம்முடைய கடமை. பலனளிப்பது ஆண்டவன் திருவருள். ஆனால் நம்முடைய முயற்சிகள் முற்றும் நடைபெறாமல் ஏதோ ஒரு பலத்த சக்தி நம்மை நசுக்குகின்றது. நாம் அனைவரும் ஒன்று கூடி அச் சக்தியைக் கிள்ளியெறியா விட்டால் நாம் என்றும் தலையெடுக்க முடியாது. அது தான் நாட்டுப்புறங்கள் சீர்திருத்த பின்பற்ற வேண்டிய அவசரமான முதற்காரியமாகும்

நாட்டுப்புறம் சீர்திருத்த வேண்டுமானால், நம் நாட்டு மக்கள் அனைவரும் நலமுற வேண்டுமானால், உயர்ந்த முறையில் வாழ்க்கைக்கு வேண்டிய கல்வி முறைகளைக் கையாளவேண்டும். நகரத்திற்கும் கிராமத்திற்கும் உள்ள பேதம் நீக்கப்பட வேண்டும். விவசாயிகளின் வரிச்சுமை குறைக்கப்பட வேண்டும். தானியத்தை விற்க சர்க்காராலேயே கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட வேண்டும். விவசாயம் பெருகி நற்பயன் அளிக்கும் முறைகளை அறிதல் வேண்டும் அடிமைத் தொழிலில் மோகங்கொண்டு அலையாது உரிமைத் தொழிலை நடத்த வேண்டும். உலகில் மனிதன் இரண்டு விதத் தொழில்களை செய்கின்றான். 1. உரிமைத் தொழில். 2. அடிமைத் தொமில். உரிமைத்தொழில், விவசாயம், வர்த்தகம், கைத்தொழில் இவைகளாம். கூலிக்கு வேலை செய்வது அடிமைத் தொழில். உரிமைத் தொழிலில் இலாபம் அதிகம் உண்டு. உரிமைத் தொழில் உள்ள நாடுகள் கௌரவமும் மதிப்பும் உடையதாகின்றன. தற்போது உலகில் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகள் உரிமைத் தொழில் செய்வதிலேயே விருப்பம் உடையதாக இருக்கக் காணலாம். அவர்கள் அடிமைத் தொழிலை வெறுப்பவர்களாக இருப்பார்கள். உதாரணமாக இங்கிலாந்திலுள்ள பெரிய பிரபுக்கள் விவசாயம் வர்த்தகம் கைத்தொழில் இவற்றையே மதிப்பார்கள். அவர்கள் இராணுவத் தொழிலை கௌரவத் தொழிலாக மதிக்கிறார்கள். நம் நாட்டோர் இவற்றுள் எப் பகுதியைச் சார்ந்தவர் என்று பார்க்கின், ஒவ்வொருவர் முகத்திலும் அடிமைத் தொழில் என்ற பதம் வரையப்பட்டிருக்கிறதென்று கூறலாகும். பலர் காலக் கேட்டினால் மேற்சொன்ன உரிமைத் தொழில்களை இழிவான தொழில்களாகவும் கருதியுள்ளனர். இவைகள் அடியோடு நீங்கி உரிமை வாழ்வை அடைய வேண்டும். வாழ்க்கை வாழ அந்நிய நாட்டை எதிர் நோக்காது, பல்வித தொழில்களையும் இங்கேயே செய்தல் வேண்டும். ஏரிகளையும் குளங்களையும் தோண்ட வேண்டும். அல்லது, பாரதியார்

"வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால்
மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்"

என்று கூறியதுபோல, எக்காலும் பயிர் செய்ய கங்கையையும், காவிரியையும் இணைத்து நாட்டை வளமாக்க வேண்டும். இவ்வாறு செய்தால் நாடு நலமடையும். நாமும் நலமடைவோம். வறுமை போகும். நல்ல காலம்

உதயமாகும். நாடும், மொழியும் சிறக்கும். இதற்கு கவிச் சக்ரவர்த்தியாகிய கம்பர் பாடிய "ஏரெழுபது" என்ற நூலே சான்று பகரும்.

முடிவாக நாம் எட்டு விஷயங்களை மனதில் வைத்து செயலில் செய்ய வேண்டும். எளிதில் மறந்துவிடுதல் நன்றன்று. அவை யாவன:—

1. கிராமங்களுக்கு, வாழ்க்கையோடு ஒன்றுபட்ட கல்விமுறைகள்.

2. சிறந்த முறையில் விவசாயம் செய்தல்.

3. நகரத்திலுள்ள அறிவாளிகள் கிராமங்களுக்குச் சென்று, அறிந்து தெளிந்தவைகளை உபதேசித்தல்.

4. உணவுக்கு வேண்டிய பொருள்களுக்கும், உடைகளுக்கும், அந்நிய நாட்டை எதிர்பார்க்காது அவைகளை நாமே உற்பத்தி செய்துகொள்ளல்.

5. கல்வி கற்ற எல்லோருக்குமே அடிமை வாழ்வு கிடைப்பது அரிதாகு மன்றோ! ஆதலால் துரைத்தனத்தாரிடம் வேலை செய்து நாம் உயிர் வாழவேண்டும் என்ற எண்ணத்தை அடியோடொழித்து, தக்கபடி, கைத்தொழிலோ, வர்த்தகமோ, விவசாயமோ, செய்து பிழைப்பதற்கேற்ற கல்வியை பெற்றோரும் ஆசிரியரும், மற்றையோரும் முயற்சி எடுத்து சிறுவர்களுக்குப் போதிக்கவேண்டும்.

6. கிராம மக்களுக்கு நகரத்தோடு தொடர்பும், நாட்டுப் பொருளை ஆதரித்தலும்.

7. கோழிப் பண்ணை, தேனீ வளர்த்தல், பாய் பின்னல், துணி நெய்தல், கால்நடை வளர்ச்சி இவைகளைக் கவனித்தல். கைத்தொழிலில் முன்னேற்றம்.

8. சகோதரத்தோடு வாழ்தலும்; ஒற்றுமையும் செல்வமும் பெருகக் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தலுமாம். இந்நெறியில் முனைந்து நின்று வெற்றிபெற்றால், நமது நாட்டுப்புறங்கள் பண்ணலமும் பெற்று திகழும். வாழ்க்கை புனிதமுறும்.



# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)



அப்பொழுது சச்சிதானந்தம்:-டாக்டர், மாசிலாமணியே! நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன். இனிமேல் எங்கள் கம்பெனி ஒரு நஷ்டத்தையும் பொறுக்காது. இப்பொழுதுதான் நடந்த ராமநாதனின் தற்கொலைக்காக, நாங்கள், 50,000 ரூபாய் வரையில் அவன் மனைவிக்குக் கொடுக்கவேண்டி யிருக்கிறது. தவிர நடந்த மூன்று வாரங்களில், எங்களுக்கு தற்கொலைகளின் மூலமாகவே மூன்று லட்சம் ரூபாய் வரையில் கொடுக்க நேர்ந்தது. நாங்கள், இனிமேல் எப்படி எங்கள் கம்பெனியை நடத்துவது-இப்படி நஷ்டமாய்க் கொண்டே போனால்? உம்!

மாசிலா:—"அதற்காக, நான் என்ன ஐயா செய்வது. எனக்கு இந்த உலகத்திலிருக்கவே பிடிக்கவில்லை. தற்கொலைகளின் மூலமாகவே எனக்குச் சாந்தியைத் தேடிக்கொள்ள விரும்புகிறேன். உனக்கு, இதைச் சகிக்க முடியவில்லை யென்றால், நீரும் ஏன் தற்கொலை செய்துகொண்டு, இந்த வுலகத்தைவிட்டு, போகக்கூடாது! அப்பொழுது உமது கஷ்டங்கள் நீங்கும்......................"

அப்பொழுது சரோஜா இடைமறித்து, "ஐயோ, நீங்கள் ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்! எனக்கு கேட்பதற்கே சகிக்கவில்லையே; எனக்கு இரவு முழுவதும் தூக்கமே வராதபடி கவலையில் ஆழ்த்துகிறீர்களே. இனிமேலாவது இப்படி யெல்லாம் பேசாதீர்கள்," என்று கூறினள்.

அப்பொழுது அவள் குரலில் பயமும், கவலையும் ஒலித்தன.

அவளைத் தொடர்ந்து சச்சிதானந்தம், "ஆம், டாக்டர்! இப்படி யெல்லாம் பேசாதீர்கள். நீங்களும் ராமநாதனைப் போலவே 50,000, ரூபாய்க்கு இன்ஷியூர் செய்திருக்கிறீர்கள். நீங்கள் பேசுவதைப் பார்த்தால் உங்கள் மனதில் என்ன நினைத்துக்கொண் டிருக்கிறீர்கள் என்பதே தெரியவில்லையே...?" என்று கூறுவதற்குள், மாசிலாமணியின் சிரிப்பு அவரைத் தடை செய்தது.

மாசிலா:—"நான் என் மனதில் என்ன நினைத்துக்கொண் டிருக்கிறேன், என்று நினைக்கிறீர்கள்; ஏன்! தற்கொலை செய்துகொள்வதைப் பற்றித்தான் நினைத்துக்கொண் டிருக்கிறேன்—தற்கொலைதான் மிகவும் சிறந்த சாதனம் என்று பலமுறைகள் நான் நினைத்திருக்கிறேன். துப்பாக்கியின் மூலம், ஒரே தடவை சுட்டுக்கொண்டால், அவ்வளவுதான், மனிதனின் கவலைகளெல்லாம் தீர்ந்துவிடுகின்றன. ராமநாதனைப் பாருங்கள்! தான் பண்ணிய பாபச் செயல்களுக்காகத் தன்னையே நொந்துகொண்டான். ஆனல் அதற்குத் தற்கொலை செய்துகொண்டதின் மூலம் தன் கவலையை ஒரே க்ஷணத்தில் மறந்துவிட்டான். அவன் முட்டாளாக விருக்கலாம்... டாக்டரது குரல் சரோஜாவின் பயங்காக் குரலால் தடைப் பட்டது.

அவள்:—போதும்! போதும்! இப்படியெல்லாம் என்ருல் கேட்கவே முடியவில்லை. உடனே நிறுத்தாவிட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்து விடும்போல் இருக்கிறது" என்று கத்தினள்.

"ஆனல்," என்று ஆரம்பித்த சச்சிதானந்தம், சரோஜாவைப் பார்த்து, "நீ உடனே போய் ஒரு டம்ளரில் வெந்நீர் கொண்டுவா! உன் கணவருக்கு உடம்பு அசௌக்கியமாகவிருக்கிறது போலிருக்கு," என்ருர்.

சரோஜா:—"ஆகா! இதோ போய் உடனே கொண்டு வருகிறேன். வெந்நீர் சமையலுள்ளில் இருக்கிறது. நான் திரும்பி வரும்வரையில் ஜாக்கிரதையாய் அவரைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி அந்த அறையை விட்டு வெளியேறினள்.

வீரமார்த்தாண்டன் கதவுக்குப் பின்புறம் மெதுவாக ஒளிந்துகொண்டான். ஆகையால் அவள் சமையலுள் அறையைத் திறந்தால் அவனை உடனே மறைத்துக்கொள்ளும் அல்லவா? மெதுவாக சரோஜாவின் காலடிகள் நெருங்கி வந்து கொண்டிருந்தன.

ஆனல் கதவைத் திறந்ததும் சரோஜா நேராக அடுப்பினண்டை சென்ருள். இதைக் கண்ட வீரமார்த்தாண்டன் சமயலறைக் கதவை மெதுவாகச் சாத்திவிட்டு, அவள் பின்னலேயே சென்ருன்.

பின்னல் காலடி சப்தம் கேட்டுத் திரும்பிய அவள், ஆச்சரியத்தால், கூக்குரலிடத் திறந்த வாயைத் தனது வலது கையால் கெட்டியாகப் பொத்தினன் வீரமார்த்தாண்டன்; அப்பொழுது அவனது இடது கையில் ஒரு கைத்துப்பாக்கி பளபளவென்று மின்னிக்கொண் டிருந்தது.

அத் துப்பாக்கியில் குண்டில்லை! ஆனல் சரோஜாவிற்கு என்ன தெரியும்!

"பெண்ணே பயப்படாதே! மனதைத் தேற்றிக்கொள். நான் உன் விருப்பப்படி இதோ உன் எதிரில் வந்திருக்கிறேன்," என்ருன்.

இப்பொழுது, வீரமார்த்தாண்டன் அவள் வாயைப் பொத்தியிருந்த கையை எடுத்துவிட்டுச் சற்று விலகிக்கொண்டான்.

சரோஜா சற்றுப் பின் சென்று சுவற்றில் சாய்ந்தவண்ணம், தன் எதிரே நின்ற உருவத்தைப் பார்த்தாள்.

அப்போது ஏற்பட்ட அதிர்ச்சி, அவளுக்கு நடுக்கத்தை உண்டாக்கியது. தன் எதிரில் கம்பீரமாக நின்றுகொண்டிருந்த வீரமார்த்தாண்டனின் உருவத்தைப் பார்த்து வியப்படைந்தாள் அவள். வீரமார்த்தாண்டன் மிகவும் வணக்கமாகக் குனிந்து அவளுடன் பேசினன். அப்பொழுது அவனது குரல் மிகவும் மிருதுவாகவும், வசீகரமாகவும் இருந்தது.

"நான் உன்னைத் திடீரென்று பயமுறுத்தியதற்காக என்னைத் தயவு செய்து மன்னித்துக்கொள். ஏனெனில் உன்னைத் தனியாகச் சந்திப்பதற்கு இதைத் தவிர எனக்கு வேறுவழி தோன்றவில்லை.

நீ நேற்றைய தினம் அரசகேசரிக்குத் தந்தி அனுப்பியது எனக்குத் தெரியும். ஆனல்! நேற்றிரவு அரசகேசரி அகால மரண மடைந்தபடியால்,—அதை, நீ இன்றுகாலைப் பத்திரிகைகளில் படித்திருக்கலாம்!—நானே அரசகேசரிக்குப் பதிலாக இங்கு வந்தேன். நீ, 'உன் கணவன்,

ராமநாதனைப்போல் தற்கொலை செய்து கொள்வார்' என்று பயப்படுவதாக உன் தந்தியில் தெரிவித்திருக்கிருயே? அப்படிப் பயப்படுவதற்குக் காரண மென்ன, சீக்கிரமாகத் தெரிவி?'' என்று துரிதமாகக் கட்டளையிட்டான் வீரமார்த்தாண்டன்.

அப்பொழுது அவன் பேசிய பேச்சு எப்பேர்ப்பட்ட கவலைகளையும் மறக்கடிக்கக்கூடிய வல்லமை வாய்ந்ததா யிருந்தது.

ஒரு புறத்தில் அவன் தோற்றம் பயங்கரமாயிருந்தாலும், அவன் சொல் வன்மை எப்பேர்ப்பட்ட பயத்தையும் போக்கடிக்கக் கூடியதாக விருந்தது.

சரோஜா, தன் கலவரங்களை மறைத்துக் கொண்டு, மெதுவாக நிமிர்ந்து கொண்டாள். அவள் உதடுகள் மெதுவாக அசைந்தன. அவள் வீரமார்த்தாண்டனைப் பார்த்து "நான்—நான் வீரமார்த்தாண்டன் என் வேண்டுகோளுக் கிரங்கி இங்கு வந்திருப்பதற்காக மிகவும் சந்தோஷப் படுகிறேன். எனக்கு என் கணவர் தற்கொலை செய்து கொள்வார் என்ற பயம் ஏற்பட்டபடியால் அப்படிப்பட்ட அர்ஜெண்டு தந்தியை அனுப்புவித்தேன்,''....................இப்பொழுது அவள் குரல் தணிந்தது. 'அந்த அறையி லிருப்பவர்களுக்குத் தான் பேசுவது தெரி யக்கூடாது' என்ற எண்ணத்துடன், அவள் மெதுவாகப் பேச ஆரம்பித் தாள், "யாரோ, ஒருவர் பின்னால் இருந்துகொண்டு, இப்படித் தற்கொலை செய்து கொள்ளும்படி தூண்டுகிருர்கள் என்று நினைக்கிறேன்! எனக்கு ராமநாதனைத் தெரியும். அவன் உயிரின் மீது மிகவும் ஆசையுள்ளவன். ஆனல் அவனே தற்கொலை செய்து கொண்டான். இப்பொழுது என் கண வரும் தற்கொலை செய்து கொள்வதாக, அடிக்கடி பயமுறுத்துவதைப் பார்த்தால், அவரையும் யாராவது தொந்தரவு செய்கிருர்களோ! என்று பயப்படவேண்டி யிருக்கிறது. சற்று நேரத்திற்கு முன்பு கூட......"

"நான் அவர் பேசியதைக் கேட்டேன்," என்று வீரமார்த்தாண்டன் இடை மறித்து, "ஆனல்! யார், இப்படி மனிதர்களை யெல்லாம் தற்கொலை செய்துகொள்ளத் தூண்டுகிருர்கள்; என்பதைப்பற்றி உனக்கேதாவது தெரியுமா?"

சரோஜா சற்றுத் தயங்கினள். பிறகு சட்டென்று, "தெரியாது! ஆனல் இத் தற்கொலைகள் செய்து கொண்டவர்கள் எல்லோரும் இன்ஷி யூர் செய்திருக்கிருர்கள்."

வீரமார்:—அது எனக்குத் தெரியும்! ஆனல் அது உனக்கெப்படித் தெரியும்?—தவிர, ராமநாதனை உனக்கெப்படித் தெரியும். ராமநாதனைப் பற்றி உன் கணவர் பேசிக் கொண்டிருந்தபொழுது நீ என் கடுவில் ஏதேதோ பயப்படுவதுபோல் அபிநயம் செய்து, அவர் பேச்சை மாற்றி ஞய்.........?''

சரோஜா:—இல்லவேயில்லை! நான் நிஜமாகப் பயந்தபடியால் தான் அப்படிப் பேசினேன்............''

வீரமார்:—போதும்! பெண்ணே, நீ ஏன் என்னிடம் இப்படிப் பேசு கிருய்? நீ சொல்வது முழுவதும் பொய். உனக்கும் ராமநாதனுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கவேண்டுமென்று நான் நினைக்கிறேன்........''

(தொடரும்)

## சித்திரபானு௵ சித்திரைமீ நவக்கிரக நிராயன சுத்த ஸ்புடம்.

(சென்னை: காலை 6-மணி இந்தியா ஸ்டாண்டர்டு மணி)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்ரன் | | சனி | | ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | வி | ச | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. |
| 1 | 13 | 22 | 9 | 359 | 31 | 325 | 38 | 59 | 16 | 354 | 23 | 55 | 1 | 313 | 11 | 33 | 30 | 137 | 58 |
| 2 | 13 | 26 | 6 | 0 | 36 | 342 | 31 | 59 | 48 | 356 | 14 | 55 | 12 | 314 | 11 | 33 | 37 | 137 | 54 |
| 3 | 13 | 30 | 2 | 1 | 36 | 355 | 24 | 60 | 19 | 358 | 5 | 55 | 23 | 315 | 10 | 33 | 46 | 137 | 51 |
| 4 | 13 | 33 | 59 | 2 | 40 | 8 | 0 | 60 | 55 | 359 | 56 | 55 | 34 | 316 | 10 | 33 | 53 | 137 | 48 |
| 5 | 13 | 37 | 56 | 3 | 38 | 20 | 12 | 61 | 32 | 1 | 47 | 55 | 45 | 317 | 10 | 34 | 1 | 137 | 44 |
| 6 | 13 | 41 | 52 | 4 | 36 | 32 | 6 | 62 | 9 | 3 | 38 | 55 | 56 | 318 | 9 | 34 | 9 | 137 | 41 |
| 7 | 13 | 45 | 49 | 5 | 41 | 43 | 48 | 62 | 45 | 5 | 29 | 56 | 7 | 319 | 9 | 34 | 18 | 137 | 38 |
| 8 | 13 | 49 | 45 | 6 | 40 | 56 | 35 | 63 | 22 | 7 | 20 | 56 | 18 | 320 | 12 | 34 | 25 | 137 | 35 |
| 9 | 13 | 53 | 42 | 7 | 38 | 67 | 33 | 63 | 58 | 9 | 11 | 56 | 29 | 321 | 12 | 34 | 32 | 137 | 32 |
| 10 | 13 | 57 | 38 | 8 | 36 | 80 | 40 | 64 | 32 | 11 | 0 | 56 | 40 | 322 | 12 | 34 | 40 | 137 | 29 |
| 11 | 14 | 1 | 35 | 9 | 35 | 92 | 53 | 65 | 12 | 12 | 53 | 56 | 51 | 323 | 12 | 34 | 48 | 137 | 25 |
| 12 | 14 | 5 | 31 | 10 | 38 | 105 | 30 | 65 | 49 | 14 | 44 | 57 | 2 | 324 | 16 | 34 | 56 | 137 | 22 |
| 13 | 14 | 9 | 28 | 11 | 31 | 118 | 14 | 66 | 25 | 16 | 24 | 57 | 13 | 325 | 19 | 35 | 5 | 137 | 19 |
| 14 | 14 | 13 | 25 | 12 | 30 | 130 | 48 | 67 | 2 | 18 | 23 | 57 | 24 | 326 | 22 | 35 | 11 | 137 | 16 |
| 15 | 14 | 17 | 21 | 13 | 28 | 143 | 57 | 67 | 38 | 20 | 13 | 57 | 35 | 327 | 26 | 35 | 19 | 137 | 13 |
| 16 | 14 | 21 | 18 | 14 | 26 | 157 | 22 | 68 | 15 | 22 | 3 | 57 | 46 | 328 | 30 | 35 | 27 | 137 | 10 |
| 17 | 14 | 25 | 14 | 15 | 25 | 170 | 57 | 68 | 52 | 23 | 53 | 57 | 57 | 329 | 34 | 35 | 35 | 137 | 7 |
| 18 | 14 | 29 | 11 | 16 | 23 | 184 | 40 | 69 | 30 | 25 | 43 | 58 | 8 | 330 | 37 | 35 | 43 | 137 | 3 |
| 19 | 14 | 33 | 7 | 17 | 20 | 198 | 38 | 70 | 5 | 27 | 32 | 58 | 11 | 331 | 41 | 35 | 50 | 137 | 0 |
| 20 | 14 | 37 | 4 | 18 | 19 | 212 | 48 | 70 | 41 | 29 | 22 | 58 | 30 | 332 | 44 | 35 | 58 | 136 | 57 |
| 21 | 14 | 41 | 0 | 19 | 17 | 225 | 8 | 71 | 18 | 31 | 12 | 58 | 41 | 333 | 48 | 36 | 6 | 136 | 54 |
| 22 | 14 | 44 | 57 | 20 | 15 | 241 | 26 | 71 | 55 | 32 | 48 | 58 | 52 | 334 | 53 | 36 | 14 | 136 | 51 |
| 23 | 14 | 48 | 54 | 21 | 13 | 256 | 11 | 72 | 31 | 34 | 24 | 59 | 3 | 335 | 59 | 36 | 23 | 136 | 48 |
| 24 | 14 | 52 | 50 | 22 | 11 | 269 | 57 | 73 | 8 | 36 | 0 | 59 | 14 | 337 | 4 | 36 | 31 | 136 | 44 |
| 25 | 14 | 56 | 47 | 23 | 8 | 284 | 5 | 73 | 44 | 37 | 36 | 59 | 25 | 338 | 10 | 36 | 40 | 136 | 41 |
| 26 | 15 | 0 | 43 | 24 | 7 | 297 | 53 | 74 | 21 | 39 | 12 | 59 | 36 | 339 | 15 | 36 | 48 | 136 | 38 |
| 27 | 15 | 4 | 40 | 25 | 5 | 311 | 40 | 74 | 54 | 40 | 48 | 59 | 47 | 340 | 20 | 36 | 56 | 136 | 35 |
| 28 | 15 | 8 | 36 | 26 | 3 | 325 | 5 | 75 | 34 | 42 | 24 | 59 | 58 | 341 | 26 | 37 | 5 | 136 | 32 |
| 29 | 15 | 12 | 33 | 27 | 1 | 338 | 19 | 76 | 11 | 44 | 0 | 60 | 8 | 342 | 31 | 37 | 13 | 136 | 28 |
| 30 | 15 | 16 | 29 | 27 | 58 | 351 | 15 | 76 | 47 | 45 | 36 | 60 | 19 | 343 | 37 | 37 | 22 | 136 | 25 |
| 31 | 15 | 20 | 26 | 28 | 56 | 4 | 1 | 77 | 24 | 47 | 12 | 60 | 30 | 344 | 42 | 37 | 30 | 136 | 22 |

## ஆகாய காட்சி.

| தேதி | நா.வி | | கிரகம். | | அக்ஷாம்சம் பா, கலை, திசை | | | தேதி | நா.வி | | கிரகம். | | அக்ஷாம்சம். பா. கலை. திசை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 3 | 13 | 49 | சந்திர | புதன் | 1 | 45 | வடக்கு | 8 | 25 | 24 | சந்திர | அங் | 6 | 25 | வடக்கு |
| | 5 | 7 | சந்திர | சூரிய | ... | ... | ... | 18 | 6 | ... | சந்திர | சூரி | ... | ... | ... |
| 6 | 9 | 44 | சந்திர | சனி | 3 | 13 | வடக்கு | 24 | 21 | 42 | புதன் | சனி | 3 | 46 | வடக்கு |
| 7 | 6 | 39 | புதன் | சூரிய | ... | ... | ... | 29 | 27 | 28 | சந்திர | சுக்ர | 0 | 37 | வடக்கு |
| | 58 | 13 | சந்திர | குரு | 4 | 52 | வடக்கு | | | | | | | | |

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சித்திரபானுஸு சித்திரைமீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865, பசலி 1351, கொல்லமாண்டு 1117, ஹிஜரா 1361, இங்கிலீஷ் 1942ஸு ஏப்ரல்மீ—மேமீ

| சித்திரை | ஏப்ரல்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | திங் | திரி29-24 | பூர18-0 | ம18-0சி | வருஷப்பிறப்பு, விஸ்வத்<br>புண்டகாலம்,மாசசிவராத் |
| 2 | 14 | செவ் | சது29-25 | உத்19-47 | அ19-47சி | அங்காரக சதுர்த்தசி [திரி |
| 3 | 15 | புத | ●31-12 | ரே22-13 | மா60 | சர்வத்திர அமாவாசை |
| 4 | 16 | வியா | பிர34-12 | அசு25-49 | அ25-49சி | வைசாகசத்தம்,மாடுவாங்க |
| 5 | 17 | வெள் | துதி37-47 | பர31-11 | சித்60 | சந்திர தரிசனம் |
| 6 | 18 | சனி | திரு42-35 | ✻37-47 | அ37-47சி | கரிநாள், கிருத்திகை [ண |
| 7 | 19 | ஞா | சது48-0 | ரோ43-49 | சித்60 | மாசசதுர்த்தி, மருர்தண் |
| 8 | 20 | திங் | பஞ்52-47 | மிரு50-25 | அ50-25சி | ரிஷபாயனம் கா-42-47 |
| 9 | 21 | செவ் | சஷ்57-0 | திரு56-23 | ம56-23சி | சஷ்டிவிரதம்சங்கரஜயந்தி |
| 10 | 22 | புத | சப்60 | புன60 | சித்60 | திருதினஸ்பிருக், கங்கா சப் |
| 11 | 23 | வியா | சப்0-36 | புன1-48 | அமி60 | அஷ்டாரம்பம் [தமி |
| 12 | 24 | வெள் | அஷ்3-35 | பூச6-1 | மா60 | |
| 13 | 25 | சனி | நவ6-1 | ஆயி9-35 | ம9-35அ | காஞ்சி ஸ்ரீராமநவமி |
| 14 | 26 | ஞா | தச6-31 | மக12-1 | மா12-1சி | பாணிகார்த்திகை கா 53-6 |
| 15 | 27 | திங் | ஏகா6-1 | பூர12-35 | சித்60 | கரிநாள்,சுபகாரியம்விலக்க |
| 16 | 28 | செவ் | துவா4-11 | உத்11-59 | அ11-59சி | பிரதோஷம், நரசிம்மஜயந் |
| 17 | 29 | புத | திர1-12<br>சது57-0 | அஸ் 10-48 | ம10-48சி | அவமாகம் [தி |
| 18 | 30 | வியா | ப○52-13 | சித்9-1 | சி9-1அ | சித்ராபௌர்ணமி |
| 19 | 1 | வெள் | பிர47-25 | சுவா6-1 | சித்60 | வைசாகபகுனம் |
| 20 | 2 | சனி | துதி41-23 | விசா2-25<br>அ58-12 | சித்60 | அவமாகம், வியாதியஸ்தர்<br>குளிக்க |
| 21 | 3 | ஞா | திரு35-25 | கேட்54-0 | ம54-0அ | |
| 22 | 4 | திங் | சது29-23 | மூல49-47 | சி49-47ம | |
| 23 | 5 | செவ் | பஞ்23-25 | பூரா46-13 | சி46-13அ | |
| 24 | 6 | புத | சஷ்17-23 | உத்42-35 | அ42-35சி | |
| 25 | 7 | வியா | சப்11-59 | திரு39-37 | சித்60 | |
| 26 | 8 | வெள் | அஷ்7-47 | அவி37-49 | சித்60 | |
| 27 | 9 | சனி | நவ4-49 | சத37-11 | அ37-11ம | |
| 28 | 10 | ஞா | தச2-23 | பூர37-13 | சி37-13அ | |
| 29 | 11 | திங் | ஏகா1-12 | உட்38-25 | சித்60 | |
| 30 | 12 | செவ் | துவா1-13 | ரே40-49 | சித்60 | |
| 31 | 13 | புத | திர8-1 | அசு43-25 | ம44-25சி | |

1942ஞு மேமீ

| புத | சூரி | அங் குரு-ச | |
|---|---|---|---|
| சே சுக் | 2-மிது-அங்<br>4-மே-புத<br>17-மீன-சுக்<br>20ரிஷப-புத<br>28-மிது-குரு | | ராகு |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

## பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதேது?




முறையாய்ச் செய்த அயக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஒளடதம் வேறொன்றுமில்லை.

**விளம்பரம்.** இதைக் கண்ணுறும் கனவான்களே! இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

இந்த லேகிய செந்தூரங்களால் நிவர்த்தியாகும் முக்கிய வியாதிகளாவன :—

தற்காலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவருக்கு உண்டான 20 வகை மேகரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த வெப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம் அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரையில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்கமுடியாத பாதையைத் தரும் நந்திமேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீங்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நாம்புகளுக்கும் முறுக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கி பலத்தைத் தருவதில் இதற்குமிஞ்சின இலேகிய பஸ்பம் வேறொன்றுமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்லுவோம். இதல்லாமல் தேகத்தைப் புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதி

களைக் கண்டித்து தினந்தோறும் மலத்தைத் தாராளமாய்ப் போகும்படியான இந்தலேகிய செந்தூரங்களே முதன்மையானதுவென்பதை நாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். இப்படிக்க இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபார குணம் தெரியவரும். தவிர யாங்கள் இம்மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவரே தான் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை; யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் இந்த லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும். இது தவறாது. இவற்றைத் தருவித்து நண்பர் எண்ணிக்கையாகச் சாப்பிட்டு 10-நாளைக்குள் குணம் இல்லாவிடில் உடனே தெரியப்படுத்தினால் கட்டாயம் இவற்றிற்கு வாங்கிய பணம் வாப்ஸ் செய்யப்படும். தவிர மேற்காட்டிய நோய்கள் உடையோர் 48-நாட்கள் சாப்பிடுவார்களேயானால் அவை முழுதும் நீங்கிவிடும். அப்படி நீங்கிக் குணம் ஏற்படாவிடில் நாங்கள் அதற்கு உத்தரவாதிகளாவோம். யாங்கள் இவ்வளவு அருமையான லேகிய செந்தூரங்களை எவ்வளவோ சிரத்தையுடன் கஷ்டப்பட்டு முடித்துப் பரோபகாரார்த்தமாக வெளியிட்டோம். இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களுக்குப் பொன்மெடல், வெள்ளிமெடல், பெற்றதல்லாமல் ஆயிரக்கணக்கான யோக்கியதாம்ச பத்திரங்களும் பெற்றிருக்கின்றோம். ஆதலின் எமது லேகிய செந்தூரங்கள் நாம் சொன்னபடி குணத்தைக் கொடுக்கும் என்பதைப்பற்றி ஜவாப்தாரியாக யிருக்கக் காத்துக் கொண்டிருக்கிறோம்; இது உண்மை. இவற்றை ஒரேதரம் தருவித்துப் பாருங்கள்; எமது உண்மை விளங்கும்.

வாதாதிக்க தோஷத்தினாலாவது, துராப்பியாசத்தினாலாவது, அதிக மனக்கவலையினாலாவது, அடிக்கடி உண்டாகும் நோயினாலாவது, மற்றெந்த காரணத்தினாலாவது பலமிழந்தவர்கள் எண்ணிக்கையாக டி லேகிய செந்தூரங்களைப புசிப்பார்களானால் இவை தேகாரோக்கியம், வலிமை, அழகு முதலியவற்றை அவர்க்குக் கொடுத்து அவர்களைச் சந்தோஷிக்கச் செய்யுமென்பதில் தடையில்லை. வெளியூர்க் கனவான்கள் இந்த லேகிய செந்தூரங்களில் முழு நம்பிக்கை வைத்து ஒரே ஒருதரம் இவற்றைப் பரீக்ஷிப்பார்களானால், அவர்கள் அவசியம் ஆனந்தமடைவார்கள்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பதார்த்தங்களையும் நீக்குதலின்றி சாப்பிடலாம். மருந்து சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும் ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு, ரசம், மார்க்கண்ட சூப்பு, இவைகளை அதிகமாகப் பசியைத் தணிக்கக்கூடிய விதமாகத் தாமதம செய்யாமல் சாப்பிடல் வேண்டியது. இவற்றைப் புசிக்கும் போதெல்லாம் பலகாராதிகள சாப்பிடல் வேண்டும். தயிர், பால் முதலியவைகள் எவைகளாயிருந்தாலும் சந்தேகமின்றி சாப்பிட்டு வரலாம்.

இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களை மட்டும் ஒருவர் தருவித்து எண்ணிக்கையாக 48-நாள் சாப்பிடுவாரேயானால் இவை தேகத்தில் வாதம், மேகமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி அவர் தேகமானது வலுத்துப் புதிய ரத்தம் பரவி தன் வாழ்நாள் பரியந்தம் இளைக்காமலிருக்கும். இவற்றைப் புருஷன் பெண்சாதி இருவரும் ஏககாலத்தில் ஒற்றுமையாய்ச் சாப்பிட்டு வந்தார்களேயானால், அவர்க்கு உதிக்கும் மக்கள் மிகுந்த

தேஜஸோடு தோன்றுவார்கள். இது உண்மை. இதை அதிகம் எழுதுதல் அனுவசியம். இந்தியா, ஸிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1-12-0. போஸ்டேஜ் அணு 8. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோர்க்கு போஸ்டேஜ் உள்பட ரூ.4.

பர்மா, பினங்கு, சிங்கப்பூர், செட்டால் முதலிய அயல்நாடுகளுக்கு 24 நாள் சாப்பிடக்கூடிய மருந்து விலை ரூ. 1-12-0. தபாற்கூலி ரூ. 1-4-0.

48-நாள் மருந்து வாங்குவோருக்கு போஸ்டேஜ் உள்பட ரூபா 5-8-0 சிங்கப்பூர், பினங்கு, மலாக்கா முதலிய வெளிநாடுகளுக்கு வி. பி. ஆர்டர் இருந்தாலும் முன்பணம் அனுப்பாதவர்களுக்கு மருந்து அனுப்பப்பட மாட்டாது.

## விலாசம்:—லேகியம் டிபோ,
## நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.

---

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும். மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசிகாரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் சார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டுவர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கிவிடும். புட்டி 1-க்கு அணு 4. வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும்பலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா 1—8—0.

---

லட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# சர்வதேள் விஷ சஞ்சீவினி.

(ரிஜில்டர் டிரேட் மார்க்)

பட்டவுடனே விஷம் பறக்தும்! அழுதவன் சிரிப்பான்!!

இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனாம்.




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பாய் இருக்கவேண்டிய ஓர் ஒளஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நான்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. எண்ணிறந்தோர் இதனால் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும். விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணா 8. தபாற் கூலி அணா 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

ஏககாலத்தில் 3-பாக்கேட் வாங்குவோருக்குத் தபாற்கூலி இனாம்,
வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.

# மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி, மேக தாமரை, மேக நமைச்சல், மேக இரணம், மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லாவகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் நீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொரு முறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண விவரத்தை தெரியப்படுத்தவும்.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை திரேக திடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணா 6.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# சர்வமேக நிவாரணத் தைலம்

இந்தப் பிரசித்திபெற்ற இராஜசஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டுவேளைகளிலும் 10 நாட்கள்வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேகரோகங்கள், மேகவாய்வு, தனுர்வாதம், முழங்கால்வாதம், குதிக்கால்வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், தொடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள், கிரந்தி ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சுபோல்போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டுபண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய் கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், பேதி, இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து.




இதன் விலை ரூபா 1-8-0 தபால்கூலி வேறு.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய தொடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கும். புட்டி 1-க்கு விலை அணா 4. தபாற்கூலி வேறு.



# கண்நோய் மருந்து

இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல், சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணாக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச்சிறந்த ஔஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணாடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணா 8. தபாற்கூலி வேறு.

---

தனலட்சமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த் தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது தேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.



# கூந்தல் வளரும் தூள்



இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது; சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும். புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.

# சூதக நிவாரணி மாத்திரை



ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலே யிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், சுழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும், ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினுலாவது வேறு எந்தக் காரணத்தினுலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டி யாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனுல் உண்டாகக்கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினுலாவது, புழு வெட்டினுலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்; இதனுல் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கைகால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும், தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தைத் தரும், மூலக்குடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேக திடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும்பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1–12–0.

# கருவைத் தடுக்கும் ஔஷதம்

இந்த இரகசிய கருவைத்தடுக்கும் ஔஷதம் ஜர்மன் தேசத்தில் செய்யப்பட்டு அநேக பண்டித மேதாவிகளால் பரிசோதிக்கப்பட்டு நற்சாக்ஷிபத்திரங்கள் பெற்றிருக்கிறபடியாலும் நமது தேசத்தில் வரவுக்கு மிஞ்சிய குழந்தைகளைப் பெற்று குடும்பங்கள் கஷ்டப்படுவதை யோசித்தும், சில பலஹீனப்பட்ட தாய்மார்கள் அடிக்கடி கர்ப்பம் தரித்து தனது சரீரம் சோர்ந்து ஹீனதிசை யடைவதைக் கண்ணுற்றும் தற்சமயம் எம்மால் மேற்படி ஔஷதம் தருவிக்கப்பட்டு விற்பனை செய்து வருகிறோம். உபயோகிக்கும் முறை ஔஷதத்துடன் அனுப்பிவைக்கப்படும்.



இதன் விலை ரூபா 2.

---

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்-

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.**

| பெயர் | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனும்பாள் 2-பாகம் | 3 | 0 |
| லோகநாயகி | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் | 1 | 8 |
| கற்கோட்டை | 2 | 0 |
| பூங்கோதை | 0 | 10 |
| வீரநாதன் | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் | 3 | 8 |
| கமலசேகரன் | 1 | 12 |
| தினகரசுந்தரி | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் | 2 | 0 |
| இராஜாமணி | 2 | 0 |
| இரத்தினபாய் | 1 | 12 |
| மதனபூஷணம் | 1 | 0 |
| சுவர்ணம்பாள் | 0 | 12 |
| தேவசுந்தரி | 1 | 4 |
| குணசுந்தரன் | 0 | 12 |
| பத்மாஸனி | 0 | 14 |
| ஆனந்தஸிங் | 2 | 0 |
| மின்சார மாயவன் | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் | 1 | 8 |
| சகோதரவாஞ்சை | 0 | 7 |

---

| பெயர் | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் | 2 | 0 |
| மலையாள பகவதி | 1 | 0 |
| அற்புத நவநீத ரமபை | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| தங்கக் குகை இரகசியம் | 0 | 12 |

| பெயர் | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை | 0 | 10 |
| கனகரத்தினம் | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் | 0 | 12 |
| நளின சுந்தரி | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் | 0 | 8 |
| உதயணன் | 0 | 7 |
| தசக்கி[illegible]வன் | 0 | 14 |
| போஜ சரித்திரம் | 0 | 5 |
| சதானந்தர் | 1 | 4 |
| ஜீவகன் வசனம் | 1 | 0 |
| கர்ணன் சரிதை | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் | 0 | 8 |
| மூப்பெருந்தாசர் | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை | 0 | 8 |
| நீலக்கொடி | 0 | 5 |
| மணவாளன் | 0 | 8 |
| பரசுராமன் | 0 | 8 |
| சிசுபாலன் | 0 | 8 |
| அங்கதன் | 0 | 4 |
| தசாவதாரம் | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் | 0 | 8 |
| சண்டோபாக்யானம் | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் | 0 | 4 |
| கண்ணபிரான் | 0 | 4 |
| செய்புட்பாடத்திரட்டு | 0 | 4 |
| நாலுமந்திரி கதை | 0 | 4 |
| மங்களேசுவரன் | 0 | 6 |
| தக்கன் | 0 | 6 |
| சீமந்தனி | 0 | 8 |
| நான்குகோடி | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் | 1 | 0 |
| மெய்க்காதலி | 0 | 8 |
| மேனுமினுக்கி கதை | 0 | 8 |
| வீணாகானன் ஞானேந்திரி | 0 | 8 |
| மனோன்மணி கதை | 0 | 8 |
| கோமளவல்லி கதை | 0 | 8 |
| விகடவல்லி கதை | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை | 0 | 5 |

ஆனந்தபோதினி ஆபிஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.